*Kumaraṉ*

*Āram 4, muttu 44*

*June 23, 1927*

Record no. 313

Registered No. M. 1823.
"KUMARAN" Karaikudi.

உ
சிவமயம்

தனிப்பிரதி
விலை அணா மூன்றரை.

# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன்தோறும் வெளியிடப்பெறுவது.

"சத்தரே உயிர்." "கருணையே தெய்வம்."

ஆரம் ௪. } காரைக்குடி. பிரபவ-ஞூ ஆனி-மீ ௯-உ (23—6—27.) 44 { முத்து ௪௪

## ஒரு சடையும் திரி சடையும்.

திருநெல்வேலி, திரு. R. P. சேதுப்பிள்ளை அவர்கள்.

(சென்ற வாரத்தொடர்ச்சி.)

அயோத்திமா நகரில் அருந்தவம் புரியும் பரதனையும் மிதிலைமா நகரில் அரசு புரியும் மன்னனையும் மற்றைய மக்களையும் வேரறுப்பேன் என்று வஞ்சினம் கூறிச்சென்ற மன்னவன் மாயையால் ஓர் அரக்கனை மிதிலை அரசன்போல் ஆக்கி, அவனைப் பாசத்தால் பிணித்துச் சீதையின் கண்ணெதிரே கொண்டுவருமாறு ஆணையிட்டான். அரக்கனது மாயத்தை அறியாத சீதை, தன் தந்தையைக்கண்டு மயங்கி அழுதாள்; கைகளை நெரித்தாள்; கண்ணை மோதினாள்; நெருப்பில் விழுந்த மலர்போல் வாடினாள்; ஏங்கினாள், நடுங்கினாள்; "ஐயோ? தந்தாய்? என்னால் உனக்கும் இத்துன்பம் வந்ததோ! மன்னர் மன்னரால் மதிக்கப்பெற்ற நீ அரக்கனது பாசத்திலகப்பட்டு மானமிழந்து உயிர்வாழ்தல் முறையோ! பெண்ணைப்பெற்ற பெரும் பாவத்தால் இப்பழியைப் பெற்றாய், நம்மிருவரையும் சிறைநீக்குவார் எவரையும் காண்கிலேனே!" என்று மயங்கி அழுதாள். இவ்வாறு தன் தந்தையின் துயரைக்கண்டும், சீதைமனம் திரியாத திண்மையைக்கண்டு, அம்மாயா மன்னனைச் சிறைவைக்குமாறு அரக்கர்கோன் பணித்தான். தன் தந்தையாய்வந்த மாயோன் மறைந்தபின்னர், சீதை அருந்துயரில் ஆழ்ந்தாள். தந்தைக்கு நேர்ந்த மானத்தைஎண்ணி மனங்குழைந்தாள். தலைவனும் தந்தையும் தன்னால் அடைந்த பகையையும் பழியையும் எண்ணி மனம் நைந்தாள். அந்நிலையில், திரிசடை, திருமகளை அருளோடு நோக்கி, இசையினுமினிய சொல்லால், "அன்னையே? உன்னெதிரே சற்றுமுன்வந்தவன் உன்தந்தை அல்லன். இங்குள்ள அரக்கர்எல்லாம் மாயையில் மிக வல்லோர்; அவ்வரக்கரில் ஒருவனாய மருத்தன் என்பவனே மாயையால் உருவம் மாற்றி மிதிலை மன்னனாகவந்தான். ஆதலால், உன் தந்தை மானமழிந்தான் என்று மனம் வருந்தாதே" என்று மயக்கம் தெளிவித்தாள். இதனை,

"உந்தையென்று உனக்கெதிர் உருவமாற்றியே
வந்தவன் மருத்தனென்றுளன் ஓர்மாயையான்
அந்தமில் கொடுந்தொழில் அரக்கனெனச்
சிந்தையில் உணர்த்தினள் அமுதின்செம்மையாள்"

என்று கம்பர் அழகாகக் கூறியுள்ளார். இவ்வாறு திரிசடை கூறிய சொற்களால் மனந்தேறி, மங்கை ஒருவாறு துயரம் தீர்ந்தாள்,

* * *

இவ்வாறிருக்கையில், இலங்கை வேந்தனது சேனைக்கும், இராம வீரனது சேனைக்கும், இலங்கைமா நகரில் கடும்போர் நிகழ்ந்தது. இலங்கை மன்னனது மகனாய மேகநாதன், வீரத்தாலும் வரத்தாலும் தலைசிறந்து விளங்கினான். தனது அரிய படைக்கலங்களைக் கொண்டு பகைவரோடு, போர் செய்யப் போந்த மேகநாதன் மாயையால் விண்ணில் மறைந்துநின்று வெம்மையும் கொடுமையும் நிறைந்த மறையோன் படையை மாற்றார்மீது ஏவினான். அப்படைவலியால் இலக்குவன் முதலிய எல்லா வீரரும் நலிந்து மயங்கி மண்ணிடை விழ்ந்தார்கள். வீரர் அனைவரும், மடிந்து கிடப்பதைக்கண்ட இராமனும்; மனங் கலங்கி சோகத்தால் மயங்கி மண்மேல் விழுந்தான். பகைவர் எல்லாம் தன் படைக்கலத்தால் பாழாயினர் என்று அறிந்து மகிழ்ந்த மேகநாதன் நிகழ்ந்த செயல்களை இலங்கை வேந்தன் இடம்சென்றுஎடுத்துரைத்தான். அப்போது மன்னனும் மனம் மிக மகிழ்ந்து மதுக் கடலை மாந்திக் களித்து எல்லையற்ற இன்பமுற்றான். அமர்க்களத்தில் இறந்துகிடக்கும் இராமனைச் சீதை தன் கண்களால் காணின் இனி உய்யும்வழி இல்லை யென்றறிந்து தன் கருத்துக்கு இசைவாள் என்று எண்ணிய இலங்கைவேந்தன், அத்திருமகளை அழைத்துக் கொண்டு போர்க்களத்தைக் காட்டுமாறு அரக்கியருக்கு ஆணைசெய்தான். அவ்வாறே; சீதையை ஓர் விமானத்தில் ஏற்றி இராமன் மயங்கிக்கிடந்த இடத்திற்கு இரக்கமற்ற அரக்கியர் கொண்டு சென்றார்கள். அப்போது திரிசடையும் திருமகளுடன் விமானத்தில் சென்றாள். மயங்கிக்கிடந்த நாயகனையும் மற்றையோரையும் கண்ட சீதை அனைவரும் இறந்தார் என்று எண்ணி நஞ்சுண்டவள்போல நடுங்கி அழுதாள். கல்லும் கரைந்துருகுமாறு திருமகள் அழுதபோது,

"மங்கையழலும் வானாட்டு மயில்கள்
அழுதார் மழலிடையோன்
பங்கிலுறையுங் குயிலழுதாள் பதுமமலர்
மேன் மாதழுதாள்
கங்கையழுதாள் நாமடந்தை யழுதாள்
கமலத் தடங்கண்ணன்
தங்கையழுதா ளிரங்காத வரக்கிமாருந்
தளர்ந்தழுதார்"

என்று கவிகூறுமாறு விண்ணுலக மாதரும், மண்ணுலகமாதரும் மயங்கி அழுதார்கள். தலைவன் இறந்த பின் உயிர்வாழ இசையாது சீதை அந்நிலையே நாயகன்மீது விழுந்து ஆவி நீக்கத் துணிந்தெழுந்தாள். அப்போது அருகே நின்ற திரிசடை அம்மங்கையைத் தழுவிப் பற்றி மற்றைய அரக்கியரை எல்லாம் விலக்கி அருந்துயரில் ஆழ்ந்த திருமகளைநோக்கி "அம்மா! இதுவும், அரக்கரது மாயமென்றறிவாய்: முன்னே மாயமான் விடுத்ததுவும், மிதிலை மன்னனை வகுத்ததுவும், மாயம் என்று அறிந்தாய் அல்லவோ?

மாயமான் விடுத்தவாறும் சனகனை
வகுத்தவாறும்
போயமா நாகபாசம் பிணித்தது
போனவாறும்
நீயமா நிலையாய்மான நிலையோ
நெறியிலாரால்
ஐயமா மாயமென்றும் அறிந்திலை
அன்னமன்னாய்,

இன்னும் நாம் கண்ட கனவும், நன்னிமித்தமும் பழுதாகுமோ? அறம் வெல்லும்; பாவம் தோற்கும் என்னும் உண்மை பொய்க்குமோ? அண்ட நாயகனை இராமனது வீரத்தன்மையை அயர்க்கலாமோ? அழியாப் பொருளாய அப்பெருமானுக்கு அழிவும் நேருமோ?

"கண்டனகனவும் பெற்றநிமித்தமு
நினது கற்பும்
தண்டவாளரக்கர் பாவச்செய்கையுந்
தருமந்தாங்கும்
அண்டர்நாயகன்றன் வீரத்தன்மையும்
அயர்க்கலாமோ
புண்டரீகற்கு முண்டோ விறுதியிப்
புலையர்க்கல்லால்"

வீரனிறப்பானுயின் அண்டகோளம் பிளக்கும் அன்றோ? ஆதவனும் நிலைகுலையுமன்றோ? மறையவன் படையின் வலிமையால் வீரர் அனைவரும் மயங்கினரேயல்லால் மாண்டாரல்லர். அம்மயக்கம் தீர்ந்து இன்னும் சிறிது பொழுதில் எழுவார்கள். ஆதலால் மனம் வருந்தாதே" என்று திருமகளைத் தேற்றினாள். அப்பொழுது சீதையும் சிறிது சிந்தித்து அன்பு நிறைந்த தோழியை நோக்கி,

"அன்னை நீ உரைத்ததொன்று
மழிந்திலதாதலானே
உன்னையே தெய்வமாக்கொண்டு
இத்தனை காலம்உய்ந்தேன்
இன்னம் இவ்விரவு முற்றுமிருக்கின்றேன்
இறத்தல் என்பால்
முன்னமே முடிந்ததன்றே என்றனள்
முளரிநீத்தாள்"

என்று உருக்கமாக மாற்றம் உரைத்தாள். "அன்னையே! இதுகாறும் நீ சொல்லியது ஒன்றும் பொய்யாது சொல்லியவாறே நிகழ்ந்திருக்கின்றது. ஆதலால் உன்னையே தெய்வமாகக் கொண்டு என் நாயகனைப் பிரிந்த இத்தனை காலமும் வாழ்ந்து வந்தேன். இன்னும் உனது சொற்களை நம்பி இவ்விரவு முழுதும் உயிர் தாங்கி யிருக்கிறேன்" என்று சோகம் நிறைந்த சொற்களால் மாற்றம் உரைத்தாள். அந்நிலையில் சோகத்தாளாய சீதையை மீண்டும் விமானம் ஏற்றி அசோகவனத்திற் கொண்டு சேர்த்தார்கள்?

* * *

அப்பால் அநுமன் மருந்துமாமலை எடுத்து வரவும் மறையோன் படையால் மயங்கிய வீரர் எல்லாம் முன்போல எழுந்து ஆரவாரித்தனர். இப்பேரொலியைக் கேட்டபோது, கதிரவன் வரவுகண்ட தாமரைபோன்று திருமகள் அகமும் முகமும் மலர்ந்தாள். பகைவரெல்லாம், சிதைந்து ஒழிந்தனர் என்று செம்மாந்து மதுவுண்டுமயங்கி மதுரகீதம் மாந்திய இலங்கை மன்னனும் மற்றைய அரக்கரும் காவலர்குழுவும்போன்று கும்பினார்கள்.

"ஆடலும் களியின்வந்த அமலையும்
அமிழ்தின்ஊன்ற
பாடலும் முழவின்தெய்வப் பாணியும்
[illegible]
ஊடலும் கடைக்கண்நோக்கும் மழலை
செவ்வுரையுமெல்லாம்
வாடன் மென்மலரேயொத்த ஆர்ப்பொலி
வருதலோடும்,

என்று கவிகூறுமாறு அரக்கரது ஆர்ப்பவிந்தழிந்தது, முன்போலவே இப்பொழுதும் கன்னியுரைத்த சொல் அழியாமைகண்டு சீதை மனங்களித்து நாயகனைக் காணலாம் என்னும் காதலால் ஆவிகாத்திருந்தாள். இவ்வாறு தனக்குத்தோழியாயமைந்த கன்னியை அன்னையாகவும், காக்கும் தெய்வமாகவும் கொண்டு சீதை புனையா ஓவியம்போல உயிர் வாழ்ந்தாள்.

* * *

இலங்கைப்போரில் மேகநாதனும், இராவணனும், மற்றைய அரக்கர் சேனையும் மடிந்தபின்னர் சீதையைச் சிறையினின்றும் அழைத்துவருமாறு இராமன் அநுமனை அனுப்பினான், சீதை செந்தீயின் மூழ்கித்தன் மாசற்ற கற்பின் பெருமையை உலகெலாம் அறியுமாறு விளக்கி அஞ்சன வண்ணனாய தன் ஆருயிர் நாயகனோடு அயோத்திமாநகரம் போகப் புறப்பட்டபோது இலங்கைக் கன்னியாய தோழியை இனிதுநோக்கி "அன்னையே! இந்நகரில் இணையற்ற அணங்காக என்றும் வாழ்வாயாக" என்று மையறு மனத்தால் வாழ்த்திப் பிரியாவிடைபெற்றுப் போயினார்.

* * *

"வணங்கு நுண்ணிடைத் திரிசடை
வணங்கலாள் கற்பிற்கு
இணங்கர் இன்மையான் நோக்கியோர்
இடரின்றி இலங்கைக்கு
அணங்குதானென இருத்தி என்றுஐயன்மா
டணைந்தாள்
மணங்கொள் வேலிளங்கோளரி மானமிப்
படர்ந்தாள்"

என்று கவி கூறுதலால் இவ்வுண்மை அறியப்படும். செல்வத்தால் நிலவிய இலங்கைமா நகரில் தந்தையார் மன்னனும் விளங்கக் கனிந்த மனமுடைய கன்னி செந்தாமரைச் செல்வியாய சீதையைச் சிந்தையில் அமைத்து, ஒரு சடையாய்த் தவம்செய்த திருமகளைக்காத்த திரிசடை என்று உலகோர் போற்ற இலங்கையணங்காக எக்காலும் இனிது வாழ்ந்தாள்.

# வயது வந்தவர்கட்கு கல்வி.

ரெவரண்டு எச். ஏ. பாப்லி எழுதியது.

'இந்து! பத்திரிகையின் இலக்கிய அனுபந்தத்தில் ரெவரண்டு எச். ஏ. பாப்லி அவர்கள் எழுதியுள்ள கட்டுரையின் மொழி பெயர்ப்பு வருமாறு:—

இந்திய நாடு முன்னேற்றம் அடைந்து வரும் இப்புதிய சகாப்தத்தில், அதி முக்கியமாகக் கவனித்து முயன்று பயன் பெற வேண்டிய விஷயங்களுள் தலையாயது வயது வந்தவர்கட்குக் கல்வி வழங்குதல் என்பதாகும். இந்தியநாடு மற்றதேசங்களைப் போலல்லாது ஜனநாயகக்கொள்கையோடு, தன்னகத்துள்ள ௩௨கோடி ஜனங்களோடும், எண்ணிறந்த சாதிப்பிணக்குகளோடும், பல சமயச்சச்சரவுகளுடனும், கல்வியறிவில்லாப் பெருஞ்சுமையுடனும் பெரும்போர் நிகழ்த்த வேண்டியிருக்கிறது. 'கற்றறிந்த சமூகத்தவர்களிடையேமட்டும் ஜனநாயகம் இறந்து படாது உயிர்வாழ முடியும்'' என கேம்பிரிட்ஜ் கட்டுரைகளில் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். ஜனநாயகமுறைவெற்றி பெறவேண்டுமாயின், உயரிய நீதிக் கொள்கைகளையும் நுண்ணிய அரசியல் ஞானத்தினையுமே அஸ்திவாரமாகக் கொண்டிருக்க வேண்டுமெனவும் அவர் கூறியுள்ளார்.

கிராம வாழ்க்கையினைச் சீர்திருத்திச் செம்மையுறச் செய்யும் பிரச்னை சாதாரண பொது ஜனங்களிடை கல்வி யறிவு பெருகியில்லாவிடில் வெற்றிபெற வியலாது.

சென்னை மாகாணப் பள்ளி விபரங்கள் மேற்கூறிய அபிப்பிராயங்களை நன்கு வலியுறுத்துகின்றன. சென்னை மாகாணத்தின் ஜனத்தொகை ௪௨௭ லட்சம். இதில் ௩௯ லட்சம் ஜனங்களே கல்விகற்றவர்கள். இதில் தற்பொழுது கல்விச்சாலைகளில் பயின்றுவரும் ௧௦ லட்சம் சிறுவர்களும் அடங்கும். அதாவது ௧௯ வயதிற்கு மேற்பட்ட ஆடவரும் பெண்டிரும் அடங்கிய ௨௯௧ லட்சத்தில் ௨௯ லட்சம் பேர்களே எழுத்து வாசனையறிந்தவர்கள். எழுத்து வாசனையறியாதவர்களின் தொகைநாளுக்கு நாள் படிப்பைக்காட்டிலும் ஜனத்தொகை விரைவாக அதிகரித்து வருவதன் பயனகப் பெருகி வருகிறது. ௧௯௦௧ம் ஆண்டில் ௩௯௦ லட்சம் பேர்களே எழுத்துவாசனையறியாதவர்களாயிருந்தனர். ௧௯௨௧-ல் ௩௯௦ லட்சம் பேர்கள் கல்வி வாசனையே யறியாதவர்களாயிருக்கின்றனர். ௨௦ ஆண்டுகளுள் ௩௦ லட்சம் அதிகப்பட்டிருக்கின்றது. கல்வியறிவிற்கு எழுத்துவாசனை பெற்றிருப்பதுமட்டும் அறிகுறியாகாதெனினும், எழுத்து வாசனையறியாதவர்கள் கல்வியறிவை விருத்திசெய்து கொள்ள முடியாது.

வயதுவந்தவர் கல்வியென்பது எழுத்து வாசனையை மட்டும் பொறுத்ததல்ல. ஒருவனது வசதிக்குத்தகுந்தவாறு வாழ்க்கையில் திறம்பட விளங்கும்படி செய்யக்கூடியதும் தனது சமூகத்திற்கு நன்மையை பயக்குமாறு செய்யக்கூடியதுமான கல்வியே வயது வந்தவர் கல்வியாகும். "உலகில் எவ்வளவோ காரியங்கள் செய்யமுடியும், அவைகட்கு வழிகளிருக்கின்றன என்று கருதும் அறிவை உண்டாக்கும் கல்வி கல்வியெனப்படும். நன்மையான காரியங்கள் செய்யவியலும் எனும் கொள்கையோடு ஒருவனது மனம் ஒன்றுபடுமெனின், தன்னைச் சுற்றிலுமுள்ள உலகின் நிலையைச் சீர்திருத்தத்தனது அறிவையும் ஆற்றலையும் உபயோகிப்பானெனின் அவனைக் கற்றவனெனக்கருதலாம்'', எனப் பிஷப் மிசார் எனும் பெரியார் கூறுகின்றார். ௧௯௧௯-ம்ஆண்டில்இங்கிலாந்தில் வயதுவந்தவர் கல்வி சம்பந்தமாகப்பரிசீலனை செய்யும் பொருட்டு நியமிக்கப்பட்ட விசாரணைச் சபையின் அறிக்கையில் அவ்வியக்கத்தின் நோக்கம் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது:—"சமூக வாழ்க்கையிலிருந்து வேறாகப் பிரிக்கமுடியாதவாறு அதனோடு வயதுவந்தவர் கல்வி இயக்கம்சம்பந்தப்படுத்தப்பட்டுள்ளது. ஒருவன் தன்னைவிருத்திசெய்துகொள்ளுதல் சமூக ஊழியம் எனும்இருகொள்கைகளையும் அதுகொண்டிருக்கிறதென்று கூறலாம். தனி மனிதரது குறைகளைப் பூர்த்தி செய்வதையும், குடிஜனங்களது வாழ்க்கையைச்சீர்ப்படுத்துவதையும் சமூக முன்னேற்றத்தையும் லட்சியங்களாகக் கொண்டிருக்கின்றதெனலாம். சிலர் சம்பந்தப்பட்ட மட்டில் சுயநலக் கொள்கைகள் பிறவற்றைக் காட்டிலும் அதிகமாகவிருக்கலாம். பெரும்பாலும் சமூக முன்னேற்றத்தையே குறியாகக்கொண்டிருக்கும். தனிமனிதர்களது கல்வியறிவைப்பெருக்க வேண்டுமென்பது மட்டும் வயதுவந்தவர் கல்வியின் லட்சியமல்ல. நல்லசமூக ஒழுங்கையும்நல்ல அறிவுநிறைந்த குடிமக்களையும் தோற்றுவிக்கவேண்டுமென்பதேயாம்.'' சமீபத்தில் வயதுவந்தவர்கல்வி என்பதுபற்றி வெளியிடப்பட்டுள்ள சிறிய நூலில் அதன் நோக்கம் வெகு தெளிவாகப் பின்வருமாறு கூறப் பெற்றுள்ளது:—

"ஆடவர்களும் பெண்டிரும்ஒழிந்த நேரங்களில் தொழில் முதலியனவும் பந்தமில்லாததும் தாராள நோக்கங்கொண்டதுமான நூல்களைப் படிப்பதால் தம்மையும் உலகத்தையும் நன்கறிந்து கொள்ளமுடியும். தமது செயல்கட்குக் காரணமாயுள்ள சொந்தவிஷயங்களையும் சமூக விஷயங்களையும் நிதானித்துக் கொள்ளமுடியும். தமக்கு உசிதமெனத்தோன்றும் முறையில் தம் சமூகத்தவருக்கு ஊழியஞ்செய்யக் கற்றுக் கொள்ளமுடியும்."

## இந்தியா விஷயம்.

தற்பொழுது இந்தியாவில் வயதுவந்தவர் கல்வியின் அவசியத்தைப் பெரிதும்வற்புறுத்துவதற்குற்ற முக்கிய காரணங்கள் வருமாறு:—

(௧) நுண்ணறிவு வாய்ந்த குடிகளாக்கும் முயற்சியின் அவசியம். அறிவினால் மட்டும் நல்ல குடிமக்களாக்கிவிட முடியாது. ஓர்வித ஒழுங்கையும் போக்கையும் ஏற்படுத்தி அவற்றை விசாலமான நோக்குள்ள கல்வியால் விருத்தி செய்வதும் அதற்கு அவசியமாகும்.

மாப்பிள்ளைக் கலகத்திற்குப் பின்னர் ஓர் முக்கியமான மத்திய ஸ்கலத்தில் அவர்களோடு அக்கலகம்பற்றி நான் விவாதித்துக் கொண்டிருக்கையில், "விஷயங்களை நன்கறிந்து இத்தகைய சம்பவங்கள் மீண்டும் நிகழாவாறு தடை செய்யக்கூடியவாறு திறமையான கல்வி எங்கட்குப் புகட்டப்பட வேண்டும்'' என்று அவர்கள் கூறினார்கள். தங்களது வாழ்க்கைக்கு இன்றியமையாது தேவைப்படும் அம்சத்தை அவர்கள் பற்றிக்கொண்டார்கள்.

"ஊரிரன்று மாத்திரையரல்லாற்பயிவாக் கரையனையர் கல்லாதவர்''

என தெய்வப்புலமை திருவள்ளுவர் கூறியிருக்கின்றார். "கல்வியறிவில்லாதவர்களை உயிரோடு வாழ்ந்து வருபவர் என்று கூறமுடியாது. எதற்கும் பயன்படாத களர் நிலத்தைப் போன்றவர்களே அவர்கள். சமூகத்தின் முன்னேற்ற வேலையில் ஈடுபடும்படி செய்யக்கூடியதும், நாட்டின் செல்வ நிலைகளை விருத்தி செய்யக்கூடியதுமானகுடிமக்கள்தன்மையே இந்தியாவிற்கு இதுகாலை மிக மிக அவசியமாகத்தேவைப்படுகின்றது.

(௨) நுண்ணறிவுவாய்ந்த வாக்காளர் தொகுதியின் அவசியம். இந்தியாவிலுள்ள மொத்த வாக்காளர்களின் தொகை ௩௦ லட்சம் மட்டுமே இருந்தபோதிலும், ராஜீயப் பொறுப்பு சம்பந்தமாக இவர்களுக்கு அறிவு ஊட்டவேண்டிய அவசியத்தைக் காண்கின்றோம். பல கட்சிகளின் கொள்கைகளைப் பற்றியும், அபேட்சகர்களைப்பற்றியும், தேசத்தின் தேவைகள் யாவை என்பது பற்றியும் ஒன்றும் அறியாமலே வாக்காளர்களில் பலர் வாக்குக்கொடுக்குமிடங்கட்குச் செல்லுகின்றனர். ௩௦௧௩ சாவடியொன்று தங்களுக்குத் தொந்திரவு கொடுக்காத இத்திற்கு மாற்றப்பட்டதை முன்னிட்டு ஒரு அபேட்சகருக்குச் சில வாக்காளர்கள் தங்களது வாக்குரிமையை வழங்கினார்கள். "வாக்காளர்களாகிய நமது எஜமானர்களுக்கு விஷயங்களைப் போதிக்கவேண்டியிருக்கிறது'' என்று ஐக்கிய மாகாண கவர்னர் கூறியிருக்கிறார்.

(௩) ஆசாரச்சீர்திருத்தத்தின் அத்தியாவசியம். ஆசாரச்சீர்திருத்தத்திற்குத் தடைகல்லாக விருப்பவர்கள் பெரும்பாலும் கல்வியறிவில்லாதவர்களாகவிருக்கின்றனர். உள்ளதைத் திருத்தாமல் அதனைக்காப்பற்றி வர வேண்டுமெனுங் கொள்கை ஒவ்வொரு சமூக முன்னேற்ற வேலையிலும் முக்கிய பயன்தரத்தக்க அம்சமாக விளங்கவேண்டும் என்றாலும் அவசரமாகச் செய்ய வேண்டிய சீர்திருத்தத்தின் அவசியத்தை ஏற்க மறுப்பதும் அல்லது மிக மிகத் தீங்கு பயப்பதான எத்தகைய சமூக வழக்கத்தை சீர்திருத்த மறுப்பதுமான அசட்டுப் பிடிவாதம் சமூகத்திற்கே பெரும் அபாயமாகும். "வழக்கம், வழக்கம்'' என்ற செத்த பேச்சு கல்வியறிவில்லாதவர்களிடந்தான் காணப்படுகின்றது. சூரியனது ஒளி செல்லாததும் இருட்டானதுமான குகைகளை மட்டுமே வௌவால்கள் தமது இருப்பிடமாகக் கொண்டிருப்பதுபோல மூடக் கொள்கைகளும் பிற்போக்கான செயல்களும் கல்வி ஒளி வீசப்பெறாத அஞ்ஞானிகளையே தமது வாசஸ்தலமாகக் கொண்டுள்ளன.

தீண்டாமையொழித்தல், கலியாண வயதையும் சம்மத வயதையும் அதிகப்படுத்தல், சாதிக்கட்டுப்பாடுகளை உடைத்தெறிதல் பிற ஆசாரச் சீர்திருத்தங்கள் செய்தல் முதலியனவெல்லாம் கல்வியறிவு நிரம்பப் பெற்றவர்களிடையேதான் சாத்தியமாகும். சூன்யம் வைப்பவர்களைக் கொளுத்துவது எனும் கெட்டவழக்கம் இங்கிலாந்தில் கல்வியறிவு அதிகம் பெருகிய பின்னர் தான் ஒழிக்கப்பட்டது.

(௪) சுகாதார வேலைகள் விரைவினில் அபிவிருத்தியடைய வேண்டுவதன் அவசியம். பொதுஜன சுகாதாரக் கொள்கைகள் சுகவாழ்க்கை விதிகள் முதலியவற்றை யறியாமலிருப்பது பரிகார முறைகளுக்குப் பெரும் விரோதியாகும். பொதுஜன சுகாதாரம் சம்பந்தமான பலமுக்கியமான சட்ட திட்டங்களைக் கையாளுவதை, ஜனங்கள் அவைகளின் நன்மையை உணர முடியாமலிருக்கும் நிலைமையை முன்னிட்டு, ஒத்தி வைக்க வேண்டியிருக்கிறது. சுகாதார விதிகள் சம்பந்தமான ஒவ்வொரு சட்டமும் இப்பெரிய அஞ்ஞானத்துடன் போர் புரிய வேண்டியிருக்கிறது. மேநாடுகளிலுள்ள ஜனங்கள் கல்வி யறிவு நிரம்பப் பெற்றிருக்கிறார்களாதலால் சுகாதாரம் சம்பந்தமான சட்ட திட்டங்கள் யாவற்றையும் ஆதரிக்கின்றனர். ஆனல் இந்தியாவிலோ அத்தகைய சட்ட திட்டங்களெல்லாம் அஞ்ஞானத்தையும் துவேஷத்தையும் எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது.

## அபிவிருத்தி முறைகள்.

வயதுவந்தவர் கல்விமுறை இந்தியாவில் மூன்று விதங்களாக நடத்தப்பட வேண்டும். கல்வி வாசனை இல்லாதிருக்கும் நிலைமையைப் போக்கவும், விஷயங்களின் தாராதரத்தை உணர்ந்து கொள்ளும் சக்தியினைப் பெருக்கவும் கல்வி வாசனையே யறியாத வயதுவந்தவர்களுக்குக் கல்வி புகட்டுதல் முதலாவதாகும். ஆரம்பக்கல்வி பயின்றிருப்பவர்களுக்குப் பொதுக்கல்வி புகட்டுவதும் ஒவ்வொரு விஷயங்களில் ஆராய்ச்சிசெய்து அறிவு பெறும்படி செய்வதும் இரண்டாவதாகும். சர்வகலாசாலைக் கல்வி யாவரும் பெறும்படி சர்வகலாசாலைகளைப் பெருக்கும் இயக்கம் ஏற்படுத்துவது மூன்றாவதாகும். இம்மூன்று வழிகளிலும் இந்தியா யாவற்றையும் புதிதாகத்தான் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. புதிய முறைகளைக் காண வேண்டியிருக்கிறது. எண், எழுத்து, படித்தல் ஆகிய மூன்றோடு மட்டும் வயதுவந்தவர் கல்வி இயக்கத்தை நிறுத்திவிடக்கூடாது. வாழ்க்கை முழுதுக்கும் பயன்படக் கூடியதாயும், ஆடவர்களும் பெண்டிரும் சமூக விஷயங்களைப்பற்றிய புதிய அபிப்பிராயங்கொள்ளும்படி செய்ய உதவுவதாயும் நல்ல குடி மக்கள் தன்மையைப் பெருக்குவதாகவும் இருக்க வேண்டும். பலநாடுகளில் அவ்வாறே அவ்வியக்கம் செய்திருக்கின்றது.

கல்வி வாசனை யறியாதவர்கள், தாங்கள் அவ்வாறிருப்பதால் கண்டுகொள்ள முடியாமலிருக்கும் புதிய உலகத்தின் ஒரு அம்சத்தையாவது காண்பதாலும், தாம் அடையப் பெறாத அம்சத்தின் மதிப்பை ஒரு சிறிதாவது உணரும் நிலை ஏற்படுவதாலும் மட்டும் கல்வி ஞானம் இல்லாமையை ஒழிக்க முடியுமே யல்லாது அதனை ஒழிக்கப் பாடுபடுவதால் மட்டும் நாம் வெற்றிபெற முடியாது. இராப்பள்ளிக்கூடங்கள் இராப்பள்ளிக்கூடங்களாக மட்டும் இருப்பதால் ஏதும் பயன் விளையாது. அறிவைப் பெருக்க வேண்டுமெனும் ஆவல் நிறைந்தவர்கள் குழுமுமிடங்களாக விருக்கவேண்டும். ஒவ்வொரு இராப்பள்ளிக்கூடத்திலும் ஒவ்வொரு புத்தகசாலை இருக்க வேண்டும். ஜனங்கள் எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டதும் படிப்பதில் அவர்களுக்குச் சுவையுண்டாக்கும் பொருட்டு அப்புத்தகசாலைகளை அவர்கள் உபயோகிக்குமாறு தூண்டவேண்டும். நூறுக்கு ௯௫பேர் கல்விவாசனையறியாதவர்களாயிருக்கும் மாப்பிள்ளைகள் வசிக்கும் கிராமமொன்றில் இவ்வாறு நடைபெறுவதை நான் கண்டேன். கல்வியறிவைப் பெருக்குவதற்குப் படக்காட்சிப் போதனமுறைகளை அதிகப்படுத்த வேண்டும். படக்காட்சி முறையால் ஏராளமான ஜனங்களை ஊக்கமாக விரும்பிக் கற்குமாறு செய்துவிடலாம். பல படங்கள் காண்பிக்கப் படுவதிலிருந்து உலகத்திலுள்ள பல விஷயங்களையும் அறிந்துகொள்வதோடு அவைகளில் காணப்படும் வார்த்தைகளைப் படிக்குமாறு செய்துவிடலாம். வாழ்க்கை விஷயங்களும் கல்வியறிவும் ஒன்றோடொன்று சேர்ந்துகொள்ளும். கிறிஸ்தவ வாலிப சங்கத்தார் பிரத்தியேகமாகத் தமிழில் தயாரித்த படங்களின் உதவியால் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் ஆடவரும் பெண்டிரும் ௫௦ மணி நேர போதனையால் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டிருக்கின்றனர்.

ஒவ்வொரு ஜில்லாவிலும் கிராமங்களில் போய் உலக அதிசயங்களை அவர்களுக்கு எடுத்துக்காட்டி விளக்கவும் வாழ்க்கையை மதிப்புள்ளதாகவும் பிறருக்குப் பயன்படுவதாகவும் எவ்வாறு நடத்துவதென்பதைப் போதிக்கவும் பிரசாரகர்கள் நியமிக்கப்பட வேண்டும். கலாசாலைப் படிப்பைப்பற்றிப் பொது ஜனங்கள் அறிந்துகொள்ளுவதற்காகவும் குமாஸ்தாக்களாகவும் உபாத்தியாயர்களாகவும் ஏராளமாக இருப்பவர்கள் குடிஜனங்கள் என்பதன் விரிந்தபொருளைத் தெரிந்துகொள்ளும்பொருட்டும் சிறிய நகரங்களுக்குச் சர்வகலாசாலையார் போதனாசிரியர்களை அனுப்பவேண்டும்.

## ஸ்தாபனங்களும் பணமும்.

இவைகட்கெல்லாம் ஸ்தாபனங்களும் பணமும் தேவை. ஸ்தாபனங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் இவ்வியக்கம் பொதுஜனங்களது இயக்கமாக இருக்கவேண்டுமேயல்லாது அரசாங்கத்தாரால் நடத்தப்படும் இயக்கமாக இருக்கக்கூடாது. ஒவ்வொரு ஜில்லாவிலும் வயதுவந்தவர்கள் கல்விச் சங்கம் ஒன்றும், மகாணம் முழுமைக்குமாக ஒன்றும் இருக்கவேண்டும். இவற்றில் தற்பொழுது இருந்துவரும் ஸ்தாபனங்களுக்கெல்லாம் ஸ்தானம் இருக்க வேண்டும். அரசாங்கத்தாரும் தாராள நோக்குடன் பொருளுதவி செய்யவேண்டும். அத்தகைய மாகாண இயக்கம் ஒன்று தோற்றுவிக்கவேண்டிய காலம்வந்துவிட்டது. அவ்வியக்கம் அவஸரமாகத் தேவைப்படுகின்றது.

இதில் கலந்து வேலைசெய்யுமாறு செய்யக்கூடிய பல ஸ்தாபனங்கள் நாட்டிலிருக்கின்றன. ஐக்கிய நாணயச் சங்கங்கள், ஜில்லா கல்விச்சபைகள், இந்திய ஊழியர் சங்கம் முதலிய சங்கங்களெல்லாம் ஜனங்களுக்கு அறிவுச்சுடர் கொளுத்தப் பாடுபடவேண்டியிருக்கிறது. அரசியல் விஷயங்கள் ஜனங்களிடம் ஓர்வித உணர்ச்சியை உண்டாக்கி விட்டன. ஆயினும் இவ்வியக்கம் அரசியல் கலவாத இயக்கமாகவே இருந்துவரும். வகுப்பு வாதங்களெல்லாம் ஜனங்களைத் தத்தம் வகுப்பு முன்னேற்றத்தில் கவனம் செலுத்தும்படி செய்துவிட்டன. ஆயினும் இவ்வியக்கம் எல்லா வகுப்புகளுக்கும் பொதுவானதாகவும், தேசம் முழுதுக்குமே பொதுவானதாகவும் இருந்துவரும். வகுப்புத் தடைகளையும் அரசியல் தடைகளையும் இவ்வியக்கம் கடந்து விடும். இந்தியாவிலுள்ள கற்ற வகுப்பார் முன் தோன்றியுள்ள பிரச்னை இதுவேயாகும். விரிவான கல்வி கற்பதனாலேற்படும் இன்பங்களை நுகர்ந்துள்ளவர்கள் அஞ்ஞானத்தையும் பிற்போக்கையும் எதிர்த்துப் போராடும் இவ்வியக்கத்தை முன்வந்து நடத்தும் தைரியமும் எண்ணமும் கொண்டுள்ளார்களா? இத்தகைய இயக்கத்தை முன்னிட்டு மாஜினி எனும் பெரியார் வெகு காலத்திற்கு முன் இத்தாலிய வாலிபர்கள் முன் கிளத்திய கொள்கை சிறந்ததோர் கொள்கையாகும். அக்கொள்கை வருமாறு:—"மனிதன் தற்போதிருக்கும் நிலைமையைக் காட்டிலும் மேம்பட்ட நிலையில் இருக்க வேண்டுமென்பது நமது விருப்பம். அன்பு, வனப்பு, மகத்துவம், உண்மை முதலியவற்றினிடத்துப் பற்றுக் கொண்டிருக்க வேண்டுமென்பதும், அவன் பின்பற்றும் கொள்கை பரிசுத்தமானதாகவும் தெய்வீகம் பொருந்தியதாகவும் இருக்கவேண்டுமென்பதும், அவன் தனது தன் மதிப்பைப் பெரிதாகக் கருதவேண்டுமென்பதும், அழிவில்லாத தனது ஆன்மாவை க்கௌரவிக்க வேண்டுமென்பதும் நமது விருப்பம்."



## காந்தி பேச்சு.

மூதுரையில் ஒரு பாட்டு, "நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே நலமிக்க, நல்லார் குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு இணங்கி இருப்பதுவும் நன்று.'' கண்ட காலிகளையெல்லாம் பற்றிப் பேசுவதை விட மகாத்மா காந்தி பேச்சுப் பேசுவது நல்லதல்லவா?

ஃ ஃ

நந்தி மலையில் மகாத்மா காந்தி ஒரு நாள் மாலையில் வெகு ஜோராக நடந்து சென்றாராம். அதனை உடல் நலமுள்ளவர்கூடக்கண்டு பொறாமைப்படுவார்கள் என்று மகாதேவ தேசாய் கூறுகிறார். இதனால் மகாத்மா உடல் முற்றுங் குணமுற்று விட்டதென்று கூற வேண்டியதில்லை.

ஃ ஃ

நந்தி மலைக்குப்பங்களூர் மெதாடிஸ்டு மிஷின் பள்ளிக்கூடச் சிறுமிகள் வருவதாகக் கடிதம் எழுதினர்களாம். அதற்கு மகாத்மா "அருமைச் சிறு குருவிகாள்! உங்களுடைய கடிதம் என்னுடைய நரம்புத் தளர்ச்சியைப் போக்கும் மருந்தாகும்'' என்று பதிலனுப்பினாராம். பூஞ்சோலையில் சுதந்திரமாகப் பறந்து விளையாடும் சிறு குருவிகளைப்போலப் பெண் குழந்தைகள் வளர்ந்தேற வேண்டுமென்பது மகாத்மாவின் கருத்து.

ஃ ஃ

அந்தப் பெண்களிடத்தில், கதரின் மகிமையை மகாத்மா உரைத்தார். "கிராமங்களுக்குப் போனல் அங்கே வறுமையைக் காண்பீர்கள். அவர்களுக்குப் படிப்புக் கிடையாது. உண்ணுவதற்குப் போதுமான உணவு கிடையாது. பால் கிடையாது. நெய் கிடையாது. நூற்பதால் வரும் காசுகளை அவர்கள் பெருந்தனமாகக் கருதுகிறார்கள். அந்தக் காசைக்கொண்டு காய்கறியாவது பிள்ளைகளுக்குப் பாலாவது வாங்குவார்கள்'' என்பது அவரது உபதேசம்.

ஃ ஃ

தென்னாட்டு ஐயரொருவர் மகாத்மா காந்திக்கு ஒரு கடிதமெழுதினர். அதில், "நான் ஒரு பிராமணனாதலால் தங்கட்கு ஆசீர்வாதம் செய்கிறேன்'' என்று கடிதத்தின் முதலில் குறிப்பிட்டார். அஷ்டத்தரித்திரத்தோடு வாழும் சிலர் சகல செல்வத்தோடு மிருக்கிற சிலரை, "சர்வா பீஷ்ட சித்திரஸ்து'' என்று ஆசிர்வாதம் செய்வது வழக்கம். அந்த வழக்கம் முற்றிப் போனபடியால் மகாத்மாவிற்கு எழுதிய கடிதத்திலும் ஆசீர்வாதம் புகுந்து விட்டது.

ஃ ஃ

தென்னப்பிரிக்கா நிலையை அறிவிக்க மகாத்மா காந்தி வங்காளத்தில் முயற்சிசெய்தாராம். 'அமிருத பஜார்' பத்திரிகை ஆபீஸிற்குச் சென்ற பொழுது அங்கிருந்த கனவான் மகாத்மா காந்தியை ஒரு நாடோடிப் பேர்வழியென்று கருதினாராம். அந்தக் காலத்தில் நாடோடியாகக் கருதப்பட்ட காந்தி இப்பொழுது உலகத்தையே ஒட்டிவைக்கும் மானுமியாக விளங்குவது ஆச்சரியம்!

ஃ ஃ

வங்காளத்தில் 'பங்கபாஸி' என்னும் பத்திரிகை மிகவும் பிரபலமுடையது. அதன் ஆசிரியரைப் பார்க்க மகாத்மா சென்றாராம். ஒரு மணி நேரம் காத்திருந்தார். "உம்மைப் போலக் காணவருபவர் தொகைக்குக் கணக்கேயில்லை; நீங்கள் கூறுவதைக் கேட்க நான் தயாராக இல்லை.'' என்று கூறி வெளியேற்றினாராம். அந்த ஆசாமியைப்பார்க்க இப்போது மகாத்மா செல்வதானல் என்ன சொல்வார்? என்ன செய்வார்! அப்பொழுது எட்டியது அவ்வளவுதான்.

ஃ ஃ

தென்னுபிரிக்காவில் மகாத்மா பெண்டாட்டியையும் குழந்தைகளையும் நிருத்தி நாகரிகமாக்கி யிருந்தார். கரண்டி முள் கத்தியினால்தான் சாப்பாடு. பார்ஸி உடை. பூட்ஸ். ஸ்டாக்கிங். இந்தமுறையை மனைவி மக்கள் ஆதரிக்கும்படி செய்ய வெகு கஷ்டப்பட்டாராம். அவர்கள் மனமார இவற்றை ஏற்றுக் கொள்ளவில்லையாம். அதிகாரத்திற்குப் பயந்தே ஏற்றுக் கொண்டனராம். பின்னர் நவீன நாகரிகத்தை ஒழித்துப் பரிசுத்தமான காந்தியாகிற காலத்தில் இவற்றை விடுவது பெருங்கஷ்டமாகி விட்டதென்று அவர் கூறுகிறார்.

ஃ ஃ

மகாத்மா தென்னுபிரிக்காவுக்குச் சென்ற கப்பல் நடுக்கடலில் பெரும் புயலில் அகப்பட்டுக்கொண்டது. பிரயாணிகள் ஜாதிமத வித்தியாசமில்லாமல் தன்னை மறந்து கடவுளை வணங்கினார்களாம். அழுதார்களாம். தொழுதார்களாம். இருபத்துநான்கு மணி நேரம் இப்படி இருந்ததாம். ஆனல் புயல் சென்ற பிறகு கடவுளைப் பற்றிய நினைப்பைப் பிரயாணிகள் மறந்து உண்ணவும் உடுக்கவும் ஆடவும் களிக்கவும் ஆரம்பித்து விட்டனராம். "இப்படித்தான் மனிதன் கடவுள் ஒளியைக்கண்ட மறு கணத்தில் மாயை வசப்படுகிறான்'' என்று மகாத்மா கூறுகிறார்.

ஃ ஃ

தென்னுப்பிரிக்காவிலுள்ள பிரஸிடெண்டு வீதியில் சென்றதற்காக அங்கு நின்று கொண்டிருந்த போலீஸ்காரன் காந்தியை உதைத்துவிட்டான். இதை அறிந்த கோட்ஸ் எனும் ஆங்கிலேயர் காந்தியிடம் சென்று, உதைத்தவன் பெயரைத் தெரிவிக்கும்படியும், அவன் பேரில் வழக்குத்தொடரின் தான் சாட்சி சொல்லுவதாகவும் கூறினர். அதற்கு காந்தி, "தாங்கள் வருந்தவேண்டுவதின்று. கறுப்புநிறத்தவர் யாவரும் அவனுக்கு ஒன்றே. என்னைப்போலவேதான் அவன் யாவரையும் நடத்துகிறான். எனவே என் பொருட்டு அவன் மீது எவ்வித வழக்குத்தொடரவும் இஷ்டப்படவில்லை'' என்றுகூறினாராம். பாருங்கள்! என்ன அன்பு! தனக்கு இன்னல் விளைவித்தவனையும் அன்போடு நோக்கும் குணம் இருப்பதாலன்றோ அவரை உலகம் மகாத்மாவென்றழைக்கிறது!

ஃ ஃ

காந்தி சிறுவயதாயிருக்கும்போது விஷ்ணு ஆலயத்திற்குச் செல்வதுண்டாம். அங்கு நடைபெறும் ஆடம்பர வைபவங்களையும் செய்கைகளையும்கண்டவுடன், காந்திக்கு இருந்த ஆலயவழிபாட்டிலுள்ள ஆசை அறவேஒழிந்து விட்டதாம். உண்மைதானே! தற்காலம் ஆலயங்களில் நடைபெறும் அக்கிரமங்களைக் காணும் பொழுது ஆலயத்திற்குப்போக எவ்வாறு மனம் வரும்?

ஃ ஃ

காந்திக்குச் சிறுவயதிலேயே கல்யாணம் ஆகிவிட்டது. கல்யாணம் ஆன பின்பும் பள்ளிக்கூடத்திற்குச் செல்வதுண்டு. பள்ளிக்கூடம் எப்போது விடுவார்கள், தனது மனைவியை எப்போது காணலாம்' என்ற எண்ணமே அவருடைய மனத்தை வாட்டிக் கொண்டிருக்குமாம். புதுப்பெண்ணல்லவா? புதிய மனைவியைக்காண எல்லோர்க்கும் ஆசை உண்டாவது சகஜந்தானே!

ஃ ஃ

காந்தி இங்கிலாந்திலிருக்கும் போது முட்டை மாமிசமாகாது என்று ஒரு நண்பர் கூறினாராம். இவரும் ஆம் என ஒப்புக்கொண்டு தினந்தோறும் முட்டை சாப்பிட்டு வந்தாராம். இரண்டு வாரங்கட்குப் பின்னர் முட்டையும் மாமிசந்தான் என்னும் உண்மையை உணர்ந்தாராம். அது முதல் முட்டை சாப்பிடும் வழக்கத்தை ஒழித்துவிட்டாராம். நம் நாட்டில் இப்பொழுது பலர் முட்டைக்கு உயிர் இல்லை யென்று கூறி டஜன் கணக்காய் முட்டைகளை உள்ளே தள்ளிவிடுகின்றனர். அன்னர் பிறரையும் முட்டை சாப்பிடும்படி இன்னும் வற்புறுத்த முற்படவில்லை!

## கிளிக்கண்ணி.

வ. வேதநாயகம் பிள்ளை.

ஆசைக் குகந்தவனை அன்பகத்தே யுள்ளவனைத்
தேசிற் சிறந்தவனைக்—கிளியே—தேடிமனம் வாடுதடி

நீல விழிக்குடைந்து நெஞ்சம் பிளவுபட்டு
சாலத் தவித்தவனை—கிளியே—சாமிபையான்
காண்பதெப்போ

மாதர் மடலெழுத மந்திரம் விழ்பவனை
காதல் மிகுத்தவனைக்—கிளியே—கண்ணிரண்டுந் தேடுதடி

வேலைப் பெருமுழக்கும் வேய்ங்குழ லின்னிசையும்
சோலைக் குயிலொலியும்—கிளியே-சுந்தரத்தைச்
சொல்லுதடி

தன்னைக் கொடுத்தெனையும் தன்னுருவ மாக்கிவிட்டு
என்னைக் கெடுத்தானடி—கிளியே—ஏமாற்றி விட்டானடி

கொஞ்ச வயதிலெனைக் கூடிக் களித்தவனை
செஞ்சொல் மிழற்றவனைக்—கிளியே—சேரமனம் தேடுதடி

## புள்ளி விவரம்.

### இந்திய விவசாயம்.

இந்தியாவில் கடைசி ஆண்டில் பயிர் செய்யப்பட்ட நிலத்தின் விஸ்தீரணம் மாகாண வாரியாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. விவரம் வருமாறு:—

### எண்ணெய் வித்துக்கள்.

| மாகாணம் | ஏக்க |
|---|---|
| சென்னை | 3,742,629 |
| பம்பாய் | 1,361,858 |
| வங்காளம் | 1,043,460 |
| ஐக்கிய மாகாணங்கள் | 901,284 |
| பஞ்சாப் | 1,4795,41 |
| பர்மா | 1,5,651,2 |
| பீஹாரும் ஒரிஸாவும் | 2,132,700 |
| மத்தியமாகாணங்களும் பேராரும் | 2,780,846 |
| அஸ்ஸாம் | 390,403 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 136,995 |
| பிற பகுதிகள் | 39368 |
| ஆக மொத்தம் | 15,018,819 |

### சர்க்கரைப் பயிர்.

| | |
|---|---|
| சென்னை | 197,508 |
| பம்பாய் | 65,760 |
| வங்காளம் | 261,400 |
| ஐக்கிய மாகாணங்கள் | 1,291,097 |
| பஞ்சாப் | 395,632 |
| பர்மா | 45,510 |
| பீஹாரும் ஒரிஸாவும் | 286,800 |
| மத்திய மாகாணங்களும் பேராரும் | 21,920 |
| அஸ்ஸாம் | 42,395 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 41,067 |
| பிற பகுதிகள் | 5,581 |
| ஆக மொத்தம் | 2,654,670. |

### பருத்தி.

| | |
|---|---|
| சென்னை | 2,865,631 |
| பம்பாய் | 5,316,805 |
| வங்காளம் | 58,700 |
| ஐக்கியமாகாணங்கள் | 1,034,627 |
| பஞ்சாப் | 2,326,335 |
| பர்மா | 351,692 |
| பீஹாரும் ஒரிசாவும் | 83,500 |
| மத்தியமாகாணங்களும் பேராரும் | 5,247,439 |
| அஸ்ஸாம் | 39,377 |
| வடமேற்குஎல்லைப்புறமாகாணம் | 38,699 |
| பிறபகுதிகள் | 51,504 |
| ஆக மொத்தம். | 17,414,249 |

### சணல்.

| | |
|---|---|
| வங்காளம் | 2,356,609 |
| பீஹாரும் ஒரிசாவும் | 246,700 |
| அஸ்ஸாம் | 134,131 |
| ஆக மொத்தம் | 2,737,931 |

### பயிரிடப்பட்ட மொத்த விஸ்தீரணம்.

| | |
|---|---|
| சென்னை | 39,924,435 |
| பம்பாய் | 33,001,783 |
| வங்காளம் | 27,747,200 |
| ஐக்கியமாகாணங்கள் | 43,606,025 |
| பஞ்சாப் | 31,721,487 |
| பர்மா | 17,650,061 |
| பீஹாரும் ஒரிசாவும் | 30,858,000 |
| மத்தியமாகாணங்களும் பேராரும் | 27,340,611 |
| அஸ்ஸாம் | 6,512,648 |
| வடமேற்கு எல்லைப்புற மாகாணம் | 2,514,124 |
| பிறபகுதிகள் | 905,955 |
| ஆக மொத்தம் | 259,784,329 |

"ஊழியனும் பிராமணரல்லாதார் இயக்கமும்" எனுந் தலைப்பெயரிட்டுக் குமரனில் சில வாரங்களுக்கு முன்னர் நான் ஒரு கட்டுரை வரைந்திருந்ததை நண்பர்கள் அறிவார்கள். அதற்கு ஊழியன் ஆசிரியர் நேர்முகமாகப் பதிலொன்றும் இறுக்காது மௌனஞ்சாதிப்பதன் காரணம் புலப்படவில்லை. 'ஊழியன்' வாயாக விளங்கும், வ. ராமசாமி ஐயங்காரின் அபிநயமே போதுமென்று நினைக்கின்றார் போலும்!

"தன்னெஞ்சே தன்னைச்சுடும்" என்றவாறு, தனது குழ்ச்சி வெளிப்பட்டுவிட்டதே என்று மனம்பதறி மயங்கிய ஐயங்கார், "மறுப்புமல்ல; விடையுமல்ல; எனது நிலையே" என்று அபிநயஞ் செய்கின்றார். கேட்டிருந்த கேள்விகளுக்குத் தக்கவாறு பதிலொன்றும் விளக்கமாகக் கூறப்படவில்லை. யாவும் அபிநயமாகவே விளங்குகின்றன. அபிநயத்தினால் அனைவர் உளத்தையும் ஈர்த்துவிடலாம் என்று அன்னார் கருதுகின்றார் போலும்! ஆனால் பிராமணரல்லாதார் உணர்ச்சியுடைய எவரும் அன்னார் அபிநயத்தில் ஈடுபடார். பார்ப்பன மாயையில் பிணிப்புண்டிருப்போரிடமே அவர் அபிநயம் பலிக்கும். நண்பர் என வாயால் அழைத்து முகத்தால் மட்டும் ஐயங்கார் எல்லோரையும் தனது அபிநயத்திற்குத் தக்கவாறு தாளம்போடும்படி செய்ய முடியாது. போலிப் போர்வைகள் சாத்திக்கொண்டு, பார்ப்பனரல்லாதாரைப் பல வகையாலும் பார்ப்பனர் ஏமாற்றிக்கொண்டு வந்தகாலம் மலையேறிவிட்டது.

ஐயங்கார், பார்ப்பன மகாசபையில் பொது தர்மம், பொது உணர்ச்சி ஆகியவற்றை வளர்த்தலையும், வகுப்புவிவாதம், ஆசாரச் சீர்திருத்தம், சமயச்சீர்திருத்தம் ஆகியவற்றை ஒழித்தலையும், சுயராஜ்யப் போரொன்றையே சாதித்தலையும் பற்றிப் பேசி அபிநயிப்பாராஹல் நலமாயிருக்கும். பிராமணன் பத்திரிகையில் எழுதிப் பிராமணரிடையே பொதுப் பிரசார அபிநயஞ் செய்வாராயின் பயன் உண்டு. பிராமணரல்லாதாரிடையே, அல்லாதார் முன்னேற்றத்திற்குத் தடையாகச் சூழ்ச்சிப் பிரசாரஞ் செய்வது எற்றுக்கு? பார்ப்பனீயத்தைத் தக்க முறையில் வளர்த்தற்கேயன்றோ? பார்ப்பன உணர்ச்சியும் சூழ்ச்சியுமே வடிவமாகவுள்ள ஐயங்கார், தான் அனைவருக்கும் பொது உடைமையென்று அபிநயஞ் செய்வதும், பொதுவேதாந்தத்தைப் புலப்பம் புலம்புவதும் ஆச்சரியமாகவேயிருக்கின்றன.

ஐயங்கார் ஆட்சி தொடங்கியது முதல் ஊழியன் பத்திரிகையின் போக்கு ஐயங்கார் மயமாகவே போய்க்கொண்டிருக்கிறது. ஊழியனது அரிய கொள்கைகளை யெல்லாம் இதுகாலை காணமுடியவில்லை. பலவேறு சுவைகளையுடைய பொருள்களைப் பார்க்க முடியவில்லை. எல்லாம் ஆகாயதத்துவமாகவும், ஆகாயக் கோட்டையாகவும், செயலில் வாராத பகட்டு அரசியல் புலம்பலாகவும், அச்சமயத்து நிகழ்ச்சியாகவுமே காணப்படுகின்றன. நம்மக்கள் முன்னேற்றத்திற்கு உயிரெனத் திகழ்கின்ற ஆசாரத்திருத்தம், சமயத்திருத்தம், பார்ப்பனக்கொடுமையை ஒழித்தல் ஆதியவற்றை ஊழியன் வெறுத்துரைக்கின்றதென்றால்; அல்லாதார் பத்திரிகையாகிய ஊழியன் அல்லாதார் பத்திரிகைகளையும், தலைவர்களையும் தொண்டர்களையும் மறைமுகமாகத் தாக்குகின்றதென்றால், அல்லாதார் நெஞ்சம் என் கொதிக்காது? ஊழியனை இந்நிலைக்குக் கொணர்ந்தது ஐயங்கார் அபிநயமே என்றால் ஐயங்கார் நெஞ்சம் பெரிதும் துடிக்கும். நண்பர் என்று அவரை நான் கூறுவேன். அப்பொழுதும் அவர் நெஞ்சம் சூழ்ச்சிசெய்யவே முந்தும்! "ஆறு கெட நாணல் விடு; ஊரு கெட நூலை விடு" எனும் முதுமொழிக்கேற்ப ஓர் ஐயங்காரின் பெருந்தொடர்பினாலேயே ஊழியன், பார்ப்பன மாயையின் அபிநயத்தில் ஈடுபட்டுப் பிராமணரல்லாதார் முன்னேற்றத்திற்குத் தடை வேலை செய்யப் புறப்பட்டிருக்கின்றான். ஐயங்கார் சூழ்ச்சி பலித்து விட்டபடியால், ஊழியனும் பிடிவாத குணத்துடன் வீண் தத்துவ விவாதம் பேசிப்பொழுதுபோக்க முற்பட்டுவிட்டான். இத்தொனியேவ்வொரு வாரமும் தலையங்கங்களிலும் கிளையங்கங்களிலும் ஒலிக்கின்றது. ஐயங்கார் அபிநயத்துடன் எழுதிவரும் கட்டுரைகளில் மறைமுக மொழியாகவும், குதர்க்க யுரையாகவும், ஆகாயதத்துவப் பேச்சாகவும் பார்ப்பனரல்லாதார் முன்னேற்றத்தைத் தடுத்துரைக்கும் பகுதிகள் பல விளங்குகின்றன. ஊழியன், ஐயங்கார் கைப்பிள்ளையாகி விட்டான். உபநயனமே பாக்கி. அந்தோ! ஊழியனே! நீயும் பார்ப்பன மாயையில் அகப்பட்

# ஐயங்காரின் அபிநயம்.

டுக் கொண்டு விழிக்க நேரிட்டது பரிதாபமே! ஊழியனும் இந்நிலையடைவான் என்று எவரும் கனவிலும் கருதியிரார். ஊழியன்பால் எனக்கு எவ்வித பகைமையுமில்லை. பிராமணரல்லாதார் இயக்கத்தை ஊழியன் வெறுக்க ஆரம்பித்ததே என்னை மறுப்பெழுதுமாறு தூண்டிற்று. ஐயங்கார் அபிநயமும் சூழ்ச்சியும் எனக்கு எட்டுணையும்பிடிக்கவில்லை. ஊழியன் தலையங்கங்களில் ஐயங்கார் அபிநயம் வெளிப்போந்த பின்னரேயே, அவரை அம்பலம் ஏற்றவேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அவர் அநாவசியமாக இழுக்கப்படவில்லை. அவரே இச்சொற்போருக்குக் காரணம்.

பதுங்கியிருந்த ஐயங்கார் வெளிப்போந்ததற்குப் பெரிதும் வந்தனம்! ஐயங்காரை அம்பலமேற்றி அவர் நிலையைத் தமிழ் மக்களனைவருக்கும் வெளிப்படுத்திய ஊழியனுக்கு வந்தனம்! ஐயங்கார் சூழ்ச்சியின் திறமைக்கு வந்தனம்! அவர் எழுதியுள்ள பதிலினது நேரிய முறையில் அமையாமல் அபிநயமாக அமைந்திருப்பது தோன்றுவது சூழ்ச்சியைச் செவ்வனே புலப்படுத்தும். அப்பதிலில், அரு. சோம. பெயரால் குமரனில் வெளிவந்த கட்டுரை என்று எழுதியிருப்பது குறும்பாகும். பிறருதவியின்றிப் பேசும் ஆற்றலும் எழுதும் ஆற்றலும் எனக்கு நன்கு உண்டு என்பதை நண்பர்கள் நன்கு உணர்வார்கள். இக்கிளர்ச்சியை எழுப்பியதற்குத் தூண்டு கோலாக நின்றது எனது மனச்சாட்சியே. எனது மறுப்புப் பொதுவகையற்றதாதலால், ஆசிரியர் பதில் இறுக்கவில்லை என்று ஐயங்கார் பசப்புகின்றார். ஐயங்கார் பேனாவின் மூலம், ஆசிரியரின் மனநிலை விளக்கப்படுவதன் காரணம் யாதோ தெரியவில்லை. பத்திரிகையின் முழுப்பொறுப்பும் ஐயங்காரைச் சார்ந்திருக்கின்றது போலும்!

ஐயங்காரும், நேர்முகமாகப் பதில் எழுதாமல், அவர் தற்சரிதத்தை, "நான் யார்?" எனும் தலைப்பின் கீழ் எழுதியிருப்பது ஆச்சரியத்தையே விளைவிக்கிறது. "நான் யார்? என் உள்ளமார்? ஞானங்களார்? என்னை யார் அறிவார்?" எனும் வாசகத்திற்கு இலக்காகவே ஐயங்கார் நாடகமும் அபிநயமும் பசப்புதலும் விளங்குகின்றன. அவர் சரிதத்தை எழுத்து மூலம் எழுதி எல்லோருக்கும் தெரிவித்துக் கொள்ளும் நிலையில் அவர் இருக்கின்றாரேயன்றிப் பிறர் தாமே தெரிந்துகொள்ளும் நிலையில் அவர் விளங்கவில்லை. இருபத்திரண்டாண்டுகளாக அவர் என்ன தேசப்பணி செய்திருக்கின்றாரென்பதை யும், திண்ணவைப் குறித்து எப்பாலுள்ள வேலை செய்திருக்கின்றார் என்பதையும் அவரே விளக்குவாராக! ஐயங்கார் அரசாங்கத்தாரோடு பெரிதும் போராடி அன்னார் செய்ந்நன்றிக்குப் பாத்திரமானதாகப் பெருமை பேசிக்கொள்ளுகின்றார். கல்கத்தா அரசாங்கத்தைச்சார்ந்த புகை வண்டிக் கண்ட்ரோலர் ஆபிசில் அன்னார் சிலகாலம் உத்யோகம் பூண்டிருந்த துண்டா? அப்பதவிக்கு அவராக மனுச் செய்து கொண்டாரா? அல்லது அரசாங்கத்தார் அழைத்து மரியாதை செய்தார்களா? தாமே மனுச் செய்து கொண்டிருந்தால் அரசாங்கத்தாரோடு அவர்போராடியது அழகாக இருக்கிறது! அரசாங்கத்தாரே வலிய அளித்தாலினில் அதனை ஏற்றுக்கொள்ளுதலே பெருந் தேசபக்திபோலும்! இப்பெருந் தேசபக்தரது வரலாற்றை இதுகாறும் பொதுஜனங்கள் தெரிந்துகொள்ளாமலிருந்தது வருந்தத்தக்கதே! ஐயங்கார் தமது தற்சரிதத்தை வாரந்தோறும் விரிவாக ஊழியனில் எழுதிவந்தால் உலகுக்குப் பேருபகாரமாக இருக்கும்.

பெரிய அனுபவ ஞானமுள்ள அரசியல் ஞானி, அரியபயிற்சியுள்ள தேசபக்தர் எனப்பெருமிதத்துடன் எழுதும் ஐயங்காரைச் சிறப்பாகத் தமிழ் நாட்டவரும் பொதுவாக இந்தியமக்களும் தமது தலைவராகக் கொள்ளாமலிருப்பது பெரிதும் வருந்தத்தக்கதே. காரைக்குடி மேலையில், தமதுபுது சுயராஜ்ய திட்டத்தைப்பற்றிப் புலம்புவதில் பயனில்லை. அகிலஇந்தியத் தலைவர்களோடு கலந்துரையாடித்தமது அமைப்பின் அழகை அவர்களுக்கு எடுத்துக்காட்டி உருவான வேலை செய்வாராயின் அழகாயிருக்கும். மனோலோகத்தில், செயல் திறன் செட்டு என்று பேசிச் செப்பிடுவித்தை செய்வதால் பயன்யாது? மேலும் வெறும் புலம்பலாகப் புலம்பிக்கொண்டு, பிராமணரல்லாதார் இயக்கம், சீர்திருத்த இயக்கம் ஆகியவற்றை அழிக்கச்சூழ்ச்சி செய்வது பார்ப்பனீய அபிநயமேயாகுமன்றோ? சூழ்ச்சிக்கப்பலின் துணையால் ஆகாயவீதியில் மிதந்து திரிசங்கு சுவர்க்க ஞானம்பேசி, செயலில் வேலைசெய்வோரைக் குறைகூறிப்பழிப்பது வித்தையேயன்றோ? இதுவே பார்ப்பனச்சூழ்ச்சி! பெருந்தேச பக்தர்களுடைய திட்டங்களுக்கெல்லாம் வழிமைக்காமறும். எனவே, இவர்திட்டம் பட்டம்போல் காற்றில் மேலே பறக்க வேண்டுவதேஎன்றுகூறுவது மிகையாகுமோ?

ஜீவகாருண்ய இயக்கத்திலும், சீர்திருத்த இயக்கத்திலும் பிரியமில்லாத ஐயங்கார் தேசத்திற்கு என்ன நன்மையைத்தான் செய்துவிடப்போகின்றாரோ? வாசகர்களே அறிந்துகொள்ள வேண்டும் ஐயங்காரும் அவர் போன்றாரும் அரசியல் போர்வைபோர்த்துக் கொண்டு சூழ்ச்சிவழியே பார்ப்பன ஆதிக்கத்திற்கு ஆதரவளிப்பதைப்போற் பிறிதொரு பெருங்கேடு இந்தியாவிற்கு வேறு என்னவேண்டும்! இவர்கள் கலந்து கொண்டால் அரசியல்இயக்கம் உருப்படுமா? அரசியல் பார்ப்பனரிற் சிலர் சீர்திருத்தஇயக்கத்தை வெறுப்பது பார்ப்பனச்சுயநல எண்ணத்தினாலேயே. இப்பொழுது தேசமிருக்கும் சிக்கலான நிலைமையில் ஆசாரச்சீர்திருத்தம், சமயச்சீர்திருத்தம், அரசியல்திருத்தம், பார்ப்பனீயத்தை ஒழித்தல் ஆகிய நான்கு இயக்கங்களும் இன்றியமையாதனவே. இதுவே பளிங்குபோற் களங்கமற்றமனமுடைய ஈ. வெ. ராமசாமி நாயக்கரது எண்ணம். இந்தியாவின் நல்வாழ்விற்குச் சீர்திருத்தங்கள் இன்றியமையாதன என்பதற்குப்பிரபல திருத்தக்காரரும் பெரியோருமான தயானந்தர், ராஜாராம் மோகன்ராய், காந்தியடிகள், லஜபதி, சேர், சரோசனிதேவி ஆகியவர்கள் சான்று தருகின்றார்கள். சீர்திருத்தமே சுயராஜ்ய அமைப்பிற்கு அடித்தளம். இம்முழுப் பூசனிக்காயைச் சோற்றில் மறைத்துப்பார்ப்பனீயத்திற்கு ஆதரவளிக்க ஐயங்கார்சூழ்ச்சி செய்வது பொறுக்கத்தக்கதாகுமோ? பெரியோர்பலர் சீர்திருத்தத்தை மதித்து உருவான பணிபுரிந்து செய்து கொண்டிருக்கும் பொழுது, ஐயங்கார் பொய் அபிநயம் செய்வது பொருந்துமோ? அனுபவ உலகம் வருமா? சுயராஜ்யம் எனும் பூச்சாண்டியைக் காட்டிச் சீர்திருத்த இயக்கம் எனும் அருமைக் குழந்தையை மருட்டப் பார்க்கிறார். செயல் திறன், சொல் செட்டு, கரும பலன் என்று ஊழியனில் அழுக்கடி அபிநயஞ் செய்து, நல்லியக்கங்கள் பலவற்றைக் கிளையாக்கிவைப்பனவாகிய சீர்திருத்தம், ஜீவகாருண்யம் ஆகியவற்றிலேயே காந்தியடிகள் பொன்போற் போற்றி வளர்க்கின்றார். அதனைத்தும் அரசியல் அனுபவ முதிர்ச்சியில்லாமையை ஐயங்கார் பசப்ப முடியாது. ஐயங்கார் சுயராஜ்ய இயக்கமொன்றே, செட்டான வேலையென்று சொன்னால், மற்றொருவர் முத்திபெறுவதே பெருஞ்செட்டு, பெரும்பலன் அருஞ்செயல் திறன், இதுவேமூலஇயக்கம் என்று உபதேசிக்கலாமன்றோ? ஐயங்காரின் ஆகாசதத்துவம் இப்பொழுது இனிது புலனாகின்றதல்லவா? பொதுப்பாட்சி பெற்றபின்னரேயே சீர்திருத்தம் ஆரம்பிக்கப்படலாம் என வாய் வேதாந்தம் பேசுகிறார். தேசசரித்திரம் தெரிந்தவரென விருதுகூறிச்சபதஞ்செய்து சாபங் கொடுக்கிறார். ஐரோப்பாவில் சீர்திருத்த இயக்கம் தோன்றிப் பயன் தந்தபின்னரே அரசியல் இயக்கம் வலுத்தது. மார்டின் லூதரின் சீர்திருத்தக் கிளர்ச்சியே அந்நாட்டைக் கண்விழிக்கச் செய்தது. அலை ஓய்ந்து நீராடுதல் என்ற உவமானத்தால் சீர்திருத்த இயக்கங்களை வெறுக்கிறார். சீர்திருத்தஇயக்கம் இப்பொழுது நம்மால் ஆரம்பமாகிப் பயன்பெறத்தக்கதாகும். ஆனால் சுயராஜ்யமோ எளிதில் பெறத்தக்கதன்று. ஜனசமூகத்தின் ஒற்றுமை நிலையையும், திருத்த வாழ்வையும் பொறுத்தே சுயராஜ்யப் பேச்சுப் பலன்தரத்தக்கது. சுயராஜ்யம் வாயிற்படியில் வந்து காத்துக்கொண்டிருக்கவில்லை. ஐயங்கார் அபிநயத்தாலும் ஆகாச தத்துவத்தாலும் சுயராஜ்யக்கனி நழுவிவிழுவதன்று. பார்ப்பன மாயையைப் பரப்பும் ஐயங்கார் சுயராஜ்யம் பேசுவது தான் ஆச்சர்யமாக இருக்கிறது. எளிய உட்பகையைத் தீர்த்து ஒற்றுமையை உண்டாக்க முடியாதிருக்கும் நிலையில், வெளிப்பகையை வீண் பேச்சில் போக்க முயல்வது நரிக்கொம்பே! உட்பகையிருக்கும் வரை பொறுப்பாட்சிபெற முடியாதென்று கோபத்துடன் சாபமிடுகின்றார். அதனை நானும் ஏற்றுக்கொள்ளுகிறேன். பார்ப்பன உணர்ச்சியும், சூழ்ச்சியும், மாயையும் இருக்கும்வரையில் சுயஆட்சிகிட்டாது என்று வலியுறுத்துகிறேன். ஐயங்கார் உட்பகை தீர்க்க என்ன வேலைசெய்யப் போகிறார்? இனியாவது பிராமணீயக் கொடுமையை ஒழிக்கப் பாடுபடுவாரா? ஊழியனில் வ.ரா. வென்று கையெழுத்திட்டு பார்ப்பனக்கொடுமையைப்பற்றிவிரித்துரைப்பாரா? சிரைக்குலைப்பது சீர்திருத்தமோ? என்று வினவுகிறார். சீர் என்பதுபார்ப்பன மாயையா என்று அவரை நான் வினவுகின்றேன். வேற்றுமையின்றிப் பெருநோக்கு நோக்க வேண்டுமென்ற பாட்டைப்பாடி நாடகத்தை முடிக்கின்றார். வேற்றுமையின்மையை உண்டாக்கவே பார்ப்பனரல்லாதார் பாடுபட்டுவருகின்றனர். ஆனால் ஐயங்கார் அந்நோக்கு நோக்குகின்றாரா? உள்ளொன்று புறம்பொன்றாக ஏன் சூழ்வினை செய்கின்றார்? மறைமுகமாக ஏன் அரசியல் போர்வைபூண்டு கொண்டு, பிராமணரல்லாதார் இயக்கத்தைத்தொலைக்குமாறு வாசகர்களைத் தூண்டுகின்றார்? பெருநோக்கு நோக்கப் பிறவைதிகப்பார்ப்பனரும் அரசியல் பார்ப்பனரும் தயாராகவிருக்கின்றார்களா? ஐயங்கார், அவர்களையும் தம்மையும் திருத்திக்கொள்ள முதலில் முற்படுவாராக! ஐயங்கார் அபிநயத்தில் சுயமரியாதை யுணர்ச்சியுடைய பிராமணரல்லாதார் எவரும் ஈடுபடாதிருப்பாராக! வந்தே மாதரம்! (அரு. சோம.)

## பெண்பாவம்.

### ஷண்பக வல்லியின் நிலை.

ஷண்பக வல்லியெனும் தாசிப்பெண்ணை அவளது பாட்டி விபசாரத் தொழில் செய்யும்படி வற்புறுத்தியதற்கு மறுத்து வீட்டை விட்டு இரகசியமாய் வெளியேறி தமிழ்நாடு பத்திரிகைக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளாள். அதில் காணப்படும் முக்கிய விஷயம் வருமாறு:—

நான் பிடிவாதமாய் "ஓர் நாயையாவது புருஷனாக அக்கினி சாட்சியாய் மணப்பேனேஒழிய தாசியாக மாட்டேன்; அதனால் என்ன ஆஸ்திவந்தாலும், எனக்குத்தேவையில்லை" யெனச் சொல்லிவிட்டேன். இதனால் ஒருவாரம் எனக்கு அன்னமளிக்கப்படவில்லை. பிறகு என்னைப்பலவந்தப்படுத்தினர்கள். நான் கல்யாணம் செய்துகொள்வேனே தவிர பொட்டுக்கட்டிக் கொள்ளமாட்டேன் எனக் கண்டிப்பாய் சொன்னேன். மீறி பலவந்தம்செய்தால் தற்கொலைசெய்து கொள்வேன் என்றும் கூறினேன். ஒரு மாதம் இப்படியாக செல்ல, ஒருநாள் (2-5-27) இரவு ஒரு தனிகர் எங்கள் வீட்டிற்கு வந்து என் பாட்டியுடன் ஏதோபேசிக் கொண்டிருந்தார். அதில்கீழ்க்கண்ட இரண்டுவார்த்தைகளே என் காதில் விழுந்தன. அதாவது, "அவள் அங்கின பிறகு உங்கள் இச்சைப்படி" இதைக்கேட்டவுடன் என் வயிற்றில் இடி விழுந்ததுபோல் ஆய்விட்டது. அன்றிரவு கடைமணிவரை எனக்கு நித்திரை வரவில்லை. அப்போது என்பாட்டி என்னைப் பார்த்துவிட்டுச் சென்றாள். நான் உடனே என்படுக்கையில் தலையணையைகிளப்போட்டு போர்வையால் போர்த்தி விட்டுச் சந்தடியின்றி வெளியே வந்து ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது அன்றுமாலை வந்த கனவான் ஆவேசத்துடன் உள்ளே வந்து தலையணையைக் கட்டிக்கொண்டார். உடனே அவ்விடத்தைவிட்டு வெகுதூரம் நடந்துவிட்டேன். நான் வரும்போது கொண்டுவந்திருந்த ஆடையைத் தரித்துக்கொண்டேன். அப்பொழுது என்கையில் ரொக்கம் ௫௦ ரூபாயும் ௨௦௦ ரூபாய் மதிப்புள்ள நகையுமிருந்தது. என்போன்ற சிறுமியர் என்னைப்போல் தவியாது, தக்க மணாளரை மணந்து சுகமேவாழப் பிரார்த்திக்கிறேன். நான்கற்பைக் காத்துக்கொள்ள வெளியேறினாலும், பிறர் தீச்சொல் சொல்வார்களென்ற எண்ணத்தால், நான் இந்தக் கடிதத்தைவரைந்து டாக்டர்வரதராஜுலு நாயுடு அவர்கட்கு அனுப்பி, அவர்களுடைய பத்திரிகையில் பிரசுரிக்க ஏற்பாடு செய்தேன். இதைப் படிக்கும்போது என்சகோதரிகளைக் காப்பதற்காக ஆண்டவனிடம் முறையிடக் கள்ளிக்கோட்டைக் கடற்கரையில் பிணமாய்க் கிடப்பேன். என் பாட்டிக்கு இனியாவது நற்புத்தி வரட்டும்.

கன்னி கழியாது உயிர்விடும்
ஷண்பகவல்லி.



# அடிகளின் உண்மைவாழ்வு.

நான்காம் பாகம்.

அதிகாரம் ரு.

(அடிகள் எழுதிவரும் தற்சரிதம். 'யங் இந்தியா'விலிருந்தும் மொழி பெயர்க்கப் பெற்றது)

ககூகூ-ம் ஆண்டில் கிறிஸ்தவ நண்பர்களோடு நான் நெருங்கிப் பழகியகாலத்து விஷயங்களைக் கற்றுக்கொண்டிருப்பவனாக மட்டுமே இருந்துவந்தேன். இயேசுநாதது போதனையை (கொள்கையை) எனக்கு எடுத்து விளக்கி நான் அதனை நம்பும்படி செய்ய பெரிதும் முயற்சிசெய்தனர். களங்கமற்ற மனத்தோடு அவர்கள் கூறுவனவற்றையெல்லாம் கவனமாகக் கேட்டுவந்தேன். இதே சமயத்தில் இந்து சமயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து வந்தேன். பிற சமயங்களின் உண்மையைக் காணவும் பெருமுயற்சி செய்துவந்தேன்.

கஅகூ-ல் நிலைமை சிறிது மாற்றமடைந்திருந்தது. பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்த அன்பர்கள் என்னைத் தங்களது குழுவில் சேர்க்கப் எண்ணியிருந்தனர். இந்து எனும் முறையில் என்னிடமிருந்து சிலவிஷயங்களை அறிந்துகொள்ளும் நோக்கத்தோடேயே அவர்கள் அவ்வாறு கருதியிருந்தனர். பிரம்மஞான நூல்களனைத்திலும் இந்துமதக் கோட்பாடுகளே பெரிதும் நிறைந்திருந்தன. எனவே நான் அவர்களுக்குப் பெரிதும் உதவியாயிருக்கக்கூடும் என எதிர்பார்த்தனர். சமஸ்கிருத மொழியில் நான் புலமைவாய்ந்தவனல்லவென்றும் இந்து சமயச்சாத்திரங்களை மூல பாஷையில் நான் கற்றதில்லையென்றும், மொழிபெயர்ப்புகளின் மூலமாக அவைகளைப்பற்றி நான் அறிந்துகொண்டிருப்பது மிகச் சொற்பமே என்றும் அவர்களிடம் எனது நிலைமை நன்கு விளக்கிக் கூறினேன். எனினும் முற்பிறப்பு விஷயங்களிலும், மறுஜென்ம விஷயங்களிலும் அவர்கள் நம்பிக்கையுள்ளவர்களாதலால் நான் சிறிதாவது உதவிசெய்யக்கூடும் என எண்ணிக்கொண்டனர். எனவே, 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப்பூச் சர்க்கரை' என்பதுபோல் எனது நிலை யிருந்தது. அவர்களில் சிலரோடு சேர்ந்து ஸ்வாமி விவேகானந்தரது ராஜயோகத்தையும் மற்றவர்களோடு எம். என். துவிவேதி அவர்களது ராஜயோகத்தையும் கற்கத் துவங்கினேன். பதஞ்சலி முனிவரது யோக சூத்திரங்களை ஒரு நண்பரோடும், பகவத்கீதையைப் பலருடனும் சேர்ந்து கற்கவேண்டியிருந்தது. நாங்களெல்லோரும் ஓர் ஆராய்ச்சிக் கழகத்தாராகச் சேர்ந்து கொண்டு ஒழுங்காக கற்றுவந்தோம். பகவத்கீதையில் எனக்கு ஏற்கனவே தூர் வித பற்றும் நம்பிக்கையும் இருந்துவந்தது. இப்பொழுது நன்கு உள்நுழைந்து ஆராய்ச்சி செய்யவேண்டிய அவசியத்தை உணர்ந்து கொண்டேன். பகவத் கீதையின் மொழிபெயர்ப்பு நூல்கள் இரண்டொன்று என்னிடம் இருந்தன. அவற்றின் உதவியால் ஆரியமொழியிலுள்ள மூலநூலின் பொருளை அறிந்துகொள்ள முயன்றேன். பிரதிதினமும் ஒன்றல்லது இரண்டு செய்யுட்களை மனப்பாடம் செய்வதென முடிவு செய்துகொண்டேன். இதன்பொருட்டு காலைக்குளியல் முதலிய நேரத்தை உபயோகித்துக் கொண்டேன். காலையில் பல் துலக்கல், ஸ்நானம் செய்தல் முதலிய வற்றிற்குச் சுமார் ௩௫ நிமிஷங்கள் செல்லும். பல்துலக்குவதற்கு ௧௫ நிமிஷங்கள். ஸ்நானத்திற்கு ௨௦ நிமிஷங்கள். அக்காலத்தில் மேனாட்டு முறைப்படி நின்றுகொண்டு நான் பல் துலக்குவது வழக்கம். எனவே, எதிர்ப்புறமுள்ள சுவற்றில் பகவத் கீதை சுலோகங்களைச் சிறு காகிதத்துண்டுகளில் எழுதி ஒட்டிவைத்திருப்பேன். இடையிடையே சுலோகங்கள் மறந்துபோயின் அவற்றைப் பார்த்துத் தெரிந்துகொள்ளுவேன். அன்றன்று மனப்பாடம் செய்ய வேண்டிய சுலோகங்களை மனப்பாடம்செய்வதற்கும் முந்தியதினப் பாடத்தை ஒப்புவிப்பதற்கும் அந்த நேரம் போதியதாகக் காணப்பட்டது. இவ்வாறாக கூ அத்தியாயங்கள் மனப்பாடம் செய்துவிட்டேன். எனினும் பிறவேலைகள் மிகுந்துவிட்டதை முன்னிட்டும், சத்தியாக்ரக இயக்கம் தோன்றி அதனை வளர்த்துவர வேண்டிய வேலை மிகுந்ததாலும் கீதை மனப்பாடம் செய்வதை நிறுத்தவேண்டியதாயிற்று. சத்தியாக்கிரக இயக்கம் எனது ஆலோசனை நேரம் முழுதையும் விழுங்கிவிட்டது. இப்பொழுதும் அவ்வாறே சத்தியாக்கிரக விஷயம் எனது கவனத்தை ஈர்த்து வருகிறதெனலாம்.

என்னுடன் படித்தவர்களிடம் பகவத்கீதைப் படிப்பு எவ்வித பயனைத் தோற்றுவித்தது என்பதை அவர்கள்தான் சொல்ல முடியும். ஆனால் பகவத்கீதை எனது வாழ்க்கைக்கு இன்றியமையாத் துணையாக ஆயிற்று. எனக்கு விளங்காத ஆங்கிலப்பதங்களின் பொருள் அறிவதற்கு ஆங்கில அகராதியைத் திருப்புவதுபோல வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்கள் தொந்தரவுகள் முதலியனவற்றிற்குப் பரிகாரம் தெரிந்துகொள்ள நீதிகளடங்கிய பகவத்கீதையெனும் அகராதியைத் திருப்பி நான் தெரிந்துகொள்ளுவது வழக்கம். 'அபரிகிரக (யாவற்றையும் துறத்தல்) சமபாவம்' (சமத்துவம்) எனும் இரு சொற்களும் என்மனத்தில் நன்கு பதிந்து கொண்டன. அச்சமத்துவக்கொள்கையை எவ்வாறு வளர்த்துப் பாதுகாப்பது எனும் பிரச்னை எழுந்தது. அவமதிப்போர், செருக்குள்ளோர் லஞ்சம் முதலியன வாங்கும் அதிகாரிகள், நேற்றுவரை ஒத்துழைத்து இன்று பொருளின்றி எதிர்த்துப் பேசும் சக ஊழியர்கள் முதலியவர்களையும் எப்பொழுது நமக்கு நன்மை செய்து வருபவர்களையும் வித்தியாசமின்றி ஒன்றாக மதிப்பதெவ்வாறு? அவ்வாறு மதித்தற்குப் பொருளுண்டோ? தன்னிடமுள்ள யாவற்றையும் ஒருவன் எவ்வாறு துறப்பது? என்னிடம் உள்ள அரிய நூல்கள் அனைத்தையும் எரித்து ஒழிப்பதா? சரீரமே ஒருவன் உடைமையாகுமல்லவா? மனைவியும் மக்களும் ஒருவனைச்சார்ந்த உடைமைகளல்லவா? எனது படங்களையெல்லாம் எரித்து விட்டு என்னிடமுள்ள யாவற்றையும் இறைவனைப்பின் பற்றுவதா? என்னிடமுள்ள யாவற்றையும் நான் துறக்காவிடில் எல்லாம் வல்ல இறைவனை நான்பின்பற்றமுடியாதெனும்நேரான பதில்கிடைத்தது. ஆங்கிலச்சட்டம்நான்பயின்றிருந்தது அப்பொழுதுஎனக்குப்பெரிதும் உதவியாயிருந்தது. ஸ்நெல் எனும் பெரியார் பட்சபாதமின்மை நேர்மைபற்றிக்கூறியுள்ள நீதிவாக்கியங்கள் எனது நினைவுக்கு வந்தன. பொறுப்பாளி 'தர்மகர்த்தா' எனும் பதத்தின் நுண் பொருளை பகவத்கீதையின் போதனைப்படி நன்குணர்ந்து கொண்டேன். ராஜநீதி சாஸ்திரத்தில் நான் கொண்டிருந்த மதிப்பு அதிகப்பட்டது. அதில் மதக் கோட்பாடுகள் அடங்கியிருக்கக் கண்டேன். மனிதன் யாவற்றையும் துறக்க வேண்டும் எனும் கீதையின் போதனைக்கு, ஒரு தர்மகர்த்தாவின் ஆதீனத்திற்குள் எவ்வளவோ பொருட்கள் இருப்பினும் அவற்றில் ஒரு சிறிது கூடத் தனக்குச் சொந்தமல்லவென்று அவன் கருதுவது போல மோட்ச வீட்டைய விரும்புவோர் கருதவேண்டும் என்று நான் பொருள் கொண்டேன். யாவற்றையும் துறத்தல் சமத்துவ எண்ணம் ஆகியவற்றிற்கு, மன மாற்றமும் நமது கொள்கையில் மாற்றமும் முன்னதாக ஏற்பட வேண்டுமென்று அவசியம் எனக்கண்டேன். உடனே ரேவாஷங்கர் பாய்க்கு இன்ஷியூரன்ஸ் பணம் ஒனிக்கட்டாமல் தீர்ந்துபோகட்டுமென்றும் இதற்கு முன் கட்டியபணத்தில் ஏதாவது கிடைக்குமாயின் திரும்பப் பெறும்படியாகவும், கிடைக்காதெனின் தொலைந்து போயிற்றென்று கருதும்படியும் எழுதினேன். ஏனெனில், என்னைப் படைத்ததுபோல் எனது மனைவி மக்களையும் படைத்துள்ள கடவுள் அவர்களைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டுவிட்டது. எனது தந்தைபோல் என் விஷயங்களைக்கவனித்து வந்த எனது சகோதரருக்கு, அதுவரை நான் சேமித்து வைத்திருந்த அனைத்தையும் அவருக்குக் கொடுப்பதாகவும் இனி என்னிடமிருந்து எதையும் அவர் எதிர்பார்க்கக் கூடாதென்றும், இனி ஏதாவது பொருள் சேமிக்கப் படுமாயின் சமூக நலனுக்காக அது உபயோகித்துக் கொள்ளப்படுமென்றும் ஓர் கடிதம் எழுதினேன்.

# மகாத்மாவின் மணிவாசகம்.

## இந்து முஸ்லீம் விஷயம்.

"யங் இந்தியா" பத்திரிகையில் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையைப் பற்றி மகாத்மா காந்தி நீண்டதோர் கட்டுரை எழுதியிருக்கிறார். அதன் சாரம் வருமாறு:— ஒரு நண்பர், 'இப்பொழுது உண்டாகியிருக்கும் திங்கிற்கு நீங்களேகாரணம். கிலாபத் இயக்கத்தில் ஹிந்துக்களைச் சேரும்படி நீங்கள் செய்திராவிடில் இப்பொழுதுள்ள துக்ககரமான நிலைமை ஏற்பட்டே இராது. எனவே இந்நிலையிலிருந்து காப்பாற்றவேண்டியதும் உம்முடையகடமைதான்' என்று எனக்கு எழுதியிருக்கிறார்.

கிலாபத் கிளர்ச்சியில் நான் சம்பந்தப்பட்டிருந்ததற்காக நான் இப்பொழுது வருந்த மீண்டப் போவதில்லை. எனது முஸ்லீம் சகோதரர்களுக்கு நான் செய்ய வேண்டிய கடமையையே செய்தேன். ஹிந்துக்கள் அச்சமயத்தில் அவ்விதம் தங்கள் முகம்ம

இதன் பொருளை எனது சகோதரர் எளிதில் உணர்ந்து கொள்ளும்படி என்னால் செய்ய முடியவில்லை. நான் அவருக்குச்செய்ய வேண்டிய கடமையை விளக்கியும், எங்களது தந்தையைக் காட்டிலும் அதிகப் புத்திசாலியாக ஆக எண்ணலாகாதென்றும் விளக்கிக் கடுமையான பாஷையில் ஓர் கடிதம் எனக்கு விடுத்தார். தந்தை செய்ததுபோலவே நானும் செய்கிறேனென்றும் 'குடும்பம்' எனும்பதத்தின் பொருளைச் சற்றுவிசாலமாக நோக்கின் எனது செயலின் உண்மை நன்கு விளங்குமெனவும் தெரிவித்துக் கொண்டேன்.

இதன்மேல் எனது சகோதரர் என் இஷ்டப்படி என்னைவிட்டு விட்டார். என்னுடன் கடிதப்போக்கு வரத்துக்கள் செய்வதையும் நிறுத்திவிட்டார். இந்நிலை எனக்கு மிகுந்த மனவருத்தத்தைக் கொடுத்தது. எனினும் எனது கடமை என நான் உணர்ந்த ஓர் விஷயத்தைக் கைவிடுவது இன்னும் அதிக துன்பத்தைக் கொடுத்திருக்கும். எனவே அதிக துன்பம் விளையாத ஒன்றையே மேற்கொண்டேன். இதன் பயனாக என் சகோதரரிடத்து நான் கொண்டிருந்த அன்பு சிறிதும் குன்றவில்லை. அவரிடம் நான் கொண்டிருந்த பக்தி எப்பொழுதும் போல் தூய்மையாகவேயிருந்தது. என்பால் அவர் அளவுகடந்த அன்பு கொண்டிருந்ததே அவரது மனத்துன்பத்திற்கு மூலகாரணம். குடும்ப விஷயத்தில் நான் சரியாக நடந்துகொள்ள வேண்டுமென்பது அவரது முக்கிய நோக்கமேயன்றி நான் அவருக்குப் பணம் அனுப்பவேண்டுமென்பதை அவர் அவ்வளவாக எண்ணவில்லை. எப்படியிருப்பினும் தனது இறுதிக்காலத்தில் எனது கொள்கையின் உண்மையையறிந்து மெச்சினர். மரணப்படுக்கையில் இருக்கையில் நான் மேற்கொண்ட வழி சரியானதென உணர்ந்து மிக்க பரிதாபமானதோர் கடிதம் எனக்கெழுதினர். என்னை மன்னிப்புக்கேட்டிருந்தார். தனது பிள்ளைகளை எனக்கு உசிதமெனத் தோன்றும் முறையில் வளர்க்குமாறு என்னிடம் ஒப்புவிப்பதாகவும் என்னை நேரில் சந்திக்கப்பெரிதும் விரும்புவதாகவும் எழுதியிருந்தார். தான் தென்னாப்பிரிக்காவர விரும்புவதாக எனக்குத் தந்திச் செய்தியனுப்பியிருந்தார். வரலாமென நான் பதில் செய்தியனுப்பினேன். ஆனால் அவ்வாறு நிகழ்வதற்கில்லை. அவரது பிள்ளைகள் விஷயத்திலும் அவரது அவாப்பூர்த்தியாவதற்கில்லை. தென்னாப்பிரிக்கா புறப்படுவதற்கு முன்னரே ஆண்டவனடி சேர்ந்தார். பழய புராதன முறைப்படியே அவரது பிள்ளைகள் பழக்கப்பட்டு வந்தனர். தங்களது வாழ்க்கை முறையை அவர்கள் மாற்றிக்கொள்ள முடியவில்லை. அது அவர்களது குற்றமல்ல. அவனவன் இயற்கைவிதியை, இவ்வளவு தான் இனிமேல் கூடாது என்று எவர் தடைசெய்ய முடியும்? அவனது தலையெழுத்தை எவர் அழிக்க முடியும்? ஒருவரைப்போல் அவரது பிள்ளைகளும் நடக்கவேண்டுமென எதிர்பார்ப்பது அறிவுடைமையாகாது.

பெற்றோரிருப்பதாலேற்படும் மகத்தான பொறுப்பை இச்சம்பவம் விளக்குகின்றது.

திய சகோதரர்களுக்கு உதவி செய்திராவிடில் பெரும்பிழை செய்தவர்களாகவேயாகியிருப்பர். தற்சமயம் கிலாபத் கிலைமை மிக்க கேவலமாகத் தோன்றலாம். ஆனால் பிற்கால முஸ்லீம்கள், ஹிந்துக்கள் சகோதர உணர்ச்சியோடு செய்ததை அன்போடு நினைத்துப் பார்ப்பார்களென்பதில் சந்தேகமில்லை. நான் இரு சமூகங்களும் ஒற்றுமையடையுமென்பதில் திடமான நம்பிக்கையுடையவன். இன்னும் அந்த நம்பிக்கையோடு தானிருக்கிறேன். எனவே, நண்பர் எதிர்பார்க்கிறபடி ஒற்றுமை யுண்டாகும்படி செய்வதற்கு என்னாலான முயற்சி செய்வேன். என்னுடைய உயிரைக் கொடுப்பதால் ஒற்றுமையுண்டாகும்படி செய்யக்கூடுமாகில் அவ்விதமே செய்யத் தயாராயிருக்கிறேன். அதற்குவேண்டிய சக்தியும் என்னிடமிருக்கிறதென்பதே எனது நம்பிக்கை. கல்நெஞ்சம்படைத்த ஹிந்து முஸ்லீம்களின் மனதை உருக்கக் கூடியதாயிருந்தால் கஉ௯௨௪-ல் நான் டில்லியில் இருந்ததைப் போல எத்தனை காலமாயினும் உண்ணா விரதமிருக்கத் தயாராயிருக்கிறேன்.

நியாயமாகவோ நியாயமில்லாமலோ இப்பொழுது இந்தியாவில் உள் நாட்டுச் சண்டை நடந்துகொண்டிருக்கிறது. காங்கிரஸ் கமிட்டி நிறைவேற்றிய தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவரும் விஷயம் இரு சமூகத்திலுமுள்ள கௌரவமுள்ள தலைவர்களைப் பொருத்தது. நமக்குள் ஏற்பட்டிருக்கும் கலகத்தைத் தீர்ப்பதற்கு அந்நிய அரசாங்கத்திடம் சென்று சமாதானத்தின் மூலமோ, அன்றி துப்பாக்கி முனையின் சகாயத்தாலோ தீர்த்துவைக்கும்படி கேட்பது நாம் சுயராஜ்யம் பெறுவதற்குத் தகுதியற்றவர்களென்பதைக் காட்டுவதாகும். சண்டை போடுகிறவர்களைப் போடாதபடி செய்யப்போதுமான சக்தி தலைவர்களென்று சொல்லிக்கொள்ளும் நம்மிடம் இல்லாது போய்விடுமாகில் ஒப்பந்தத்தால் எவ்வித பலனு முண்டாகாதென்பதில் சந்தேகமில்லை. இந்த ஒப்பந்தத்தால் டில்லியில் எவ்வித பலனும் ஏற்படாமல் பக்ரீத் பண்டிகையின்போது நிலைமையை சமாதானமாக வைப்பதற்கு சர்க்கார் போலீஸ் பந்தோபஸ்துக்களைச் செய்ய நேர்ந்தது. எனக்குஅஹிம்சாதர்மத்தில் நம்பிக்கையிருக்கிறது. அதில் பயங்கொள்ளிகளுக்கு வேலை கிடையாது. தங்களையும் தங்கள் ஸ்திரீகளையும் தன்னலத் தியாகத்தால் காப்பாற்ற முடியவில்லையாகில், அவர்கள் யுத்தஞ் செய்து காப்பாற்றவேண்டும். நாங்கள் ஒருவருக்குள் ஒருவர் துன்பம் விளைவித்துக் கொள்ளாதபடி காப்பாற்ற வேண்டுமென்று சர்க்காரைக்கேட்பது மனிதத் தன்மையாகாது.

நாம் இவ்வளவு தூரம் மனிதத் தன்மையற்றிருக்கும்பொழுது சுயராஜ்யத்தைப் பற்றி நம்புவதில் பயனில்லை. வேற்றுமைகள் எப்பொழுதும் இருந்துகொண்டுதான் இருக்கும். அவை மற்ற விஷயமானதாயினும், வேறு எவ்விதமானதாயினும் பஞ்சாயத்து சபைகளைக் கொண்டு சமாதானம் செய்துகொள்ளவேண்டும். நமக்கு சுயராஜ்யம் வேண்டுமாகில் நம்மை ஆள்வோருக்கு நமது ஒற்றுமையைக் காட்டுவதோடு, நமது சிறந்த ஒழுங்கையும் உலகத்திற்குக் காட்ட வேண்டும். நல்ல புத்திமதி சொல்லக்கூடிய தலைவர்களை பஞ்சாயத்தாராகத் தேர்ந்தெடுக்க முடியாவிடில் அல்லதுநாம் தேர்ந்தெடுக்கும் பஞ்சாயத்தார்கள் முடிவுகூறுகிறவரையில் நாம் காத்துக் கொண்டிருக்கும் அளவுக்கு ஒழுங்கில்லாமல் காட்டு மிராண்டிகளாய் இருப்போமாகில் நாமகளைத்து நல்ல அறிவை அடைகிறவரையில் சண்டையிட வேண்டியதுதான். நாகரிக தேசத்தினரைப் பின்பற்றி நாமே வலிய சமாதானம் அடையமுடியாவிடில் அல்லது பிரிட்டிஷ் நியாயமாவது துப்பாக்கி முனையாவது தடைசெய்யாதபடி கடைசிவரையில் யுத்தஞ் செய்துவிடுவதென்று காட்டுமிராண்டிகளைப்பின்பற்றி முடிவுசெய்திருப்பீர்களாகில் நமக்குக் கிடைக்குமென்று நாமெதிர் பார்க்கும்சொற்ப சீர்திருத்தமும் நமது ஏழை ஜனங்களை மேலும் அடிமைப் படுத்தவே பயன்பெறும்.

## உள்ளுறை.


| | | |
|---|---|---|
| ஒரு சடையும்திரிசடையும் | ... | க |
| வயதுவந்தவர்கட்குக் கல்வி | ... | உ |
| காந்தி பேச்சு | ... | ௩ |
| கிளிக்கண்ணி | ... | ,, |
| புள்ளி விவரம் | ... | ,, |
| ஐயங்காரின் அபிப்ராயம் | ... | ச |
| பெண்பாவம் | ... | ,, |
| அடிகளின் உண்மை வாழ்வு | ... | ரு |
| மகாத்மாவின் மணிவாசகம் | ... | ,, |
| தலையங்கம்:— | | |
| ரோடு வசதி | ... | ௬ |
| எண்டிசைக்காட்சி | ... | எ |
| உள்ளூர் | ... | ,, |
| தந்தி | ... | ,, |
| கப்பல் | ... | ,, |
| செய்தித்திரட்டு | ... | ,, |
| தமிழகம் | ... | அ |
| தாயகம் | ... | ,, |
| அயலகம் | ... | ,, |
| எதிரொலி | ... | ௯ |
| கடிதங்கள் | ... | ௧0 |
| இரங்கூனில் லஞ்சா | ... | கக |


நாளென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.


குமரன், காரைக்குடி.
பிரபவ ஞ ஆனி மீ கூஉ


## ரோடு வசதி.

மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத வசதிகளுள், ரோடு வசதியும் ஒன்றாகும். அதிலும், மோட்டார்கார்கள் உபயோகத்திற்கு வந்த பின்னர் மிகவும் அவசியமாகிவிட்டது. ஏற்கெனவே ஜில்லா போர்டாரும் தாலூகா போர்டாரும் ரோடுகளைப் பாரமரிக்கும் பொறுப்பு வாய்க்கப் பெற்றிருக்கின்றனர். ரோடின் அவசியத்தை ஜனங்கள் நன்கு உணர்ந்த பின்னரும் நல்ல நிலைமையில் வைக்கப் பெறாதிருக்குமானால் அது பெரிதும் வருந்தத்தக்கதே யன்றோ? பொதுவாக இந்தியாவிலேயே ரஸ்தாக்கள் போதுமான அளவு போடப்படவில்லை என்பது உலகறிந்த விஷயமாகும். மோட்டார்கார்கள் இதுவரை இந்தியாவில் சுமார் நூற்றைம்பதாயிரம் வரை இறக்குமதி செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. இறக்குமதித் தீர்வையோ நூற்றுக்கு முப்பதாக விதிக்கப்பட்டிருந்தது. இப்பொழுது இருபது வீதம் விதிக்கப்படுகிறது. இந்த இனத்தில் எண்ணற்ற பொருள் அரசாங்கத்தினருக்குக் கிடைப்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். ஐரோப்பிய யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னர் அதிகமான கார்கள் இறக்குமதியானதில்லை. அதற்குப் பின்னர் வருஷந்தோறும் இறக்குமதி அதிகரித்துக்கொண்டே வந்திருக்கின்றது. பதின்மூன்றாண்டுகளில் சுமார் பதினைந்துகோடி ரூபாய் மோட்டார் கார் இறக்குமதி இனத்தில் தீர்வையாக அரசாங்கத்தாருக்குக்கிடைத்திருக்க வேண்டும். மோட்டார் தனிச் சாமான்களின் மேலும் இறக்குமதி வரி விதிக்கப்பட்டுக் கோடிக்கணக்கான பொருள் அரசாங்கத்தாருக்குக் கிடைத்திருக்கின்றது. ஆனால், இவ்வளவு வரும்படியைக் கொடுக்கும் மோட்டார்கார்கள் சுகமாக ஓடுவதற்கு அரசாங்கத்தார் செய்து கொடுத்துள்ள வசதியென்ன என்பதே நமது கேள்வி. டன்லப் கம்பெனியின் மானேஜரான ஸர். ரோனல்டு போல்டு என்பவர், இந்தியாவில் ரஸ்தாக்களை அதிகரிப்பதற்குத் தனியாக ஒரு போர்டு இருக்கவேண்டுமென்று கூறுகிறார். தனியான போர்டு ஒன்று அமைக்கப்பட்டாலும், அல்லது இப்பொழுதுள்ள ஜில்லா, தாலூகா போர்டாராலேயே கவனிக்கப்பட்டாலும் பாதகம் ஒன்றுமில்லை. ஆனால் ரோடு வசதிக்காகவென்று அரசாங்கத்தார் பணத்தை ஒதுக்க வேண்டுவது அவசியமாகும். ரயில் வசதியில்லாத ஊர்களே இந்தியாவில் பலவாகும். பரந்த, பெரிய தேசமாகிய இந்தியாவின் விஸ்தீரணத்துக்குப் போதுமான ரயில் வசதி கிடையாதென்பது அனைவருமறிந்ததே. ரயில் வசதியில்லா ஊர்களை, ஒன்றோடொன்று சேரப்பிணைத்து நிற்பது மோட்டார்காரேயாகும்.

தற்போது சொந்தக்கார்களும் சர்வீஸ் கார்களும் ஓடாத பகுதிகள் இல்லை யென்று கூறவேண்டியதில்லை. ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் பெரிய ரோடுகளுக்குக் கிளைவழிகள் பிணைக்கப்படவேண்டியதவசியமாகும். அம்மாதிரியான முயற்சித்தல் ஜில்லா, தாலுக்கா போர்டுகளில் அங்கம் பெற்றிருப்பவர்களது கடமையாகும். ஏற்கெனவேயுள்ள ரோடுகளைப் பாரமரிக்கும் விஷயம் பெரிதும் கவனிக்கத்தக்கது. அதிகமானகார்கள் ஓடுகிற ரோடுகள் அகலப்படுத்தப் படுதல் அவசியமாகும். பல ஒடுங்கிய வழிகளில் கார்கள் ஒன்றோடொன்று மோதுற்றுத் தயர்கள் விளைக்கின்றன. கம்வாய்க் கரைகளிலும், பிற சில இடங்களிலும் அபாயம் நேருவதற்குச் சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. அம்மாதிரியான இடங்களில் கார்கள் ஓடிவரும்போது வண்டிமாடுகள் வெறித்து ஆபத்திற்குள்ளாக்குவதைக் காணலாம். அவ்வண்ணம் நிகழாதவாறு வேலியிடல் அவசியமாகும். பெரும்பாலான ரோடுகள், அவ்வழி பிரயாணம் செய்பவரின் முதுகுத்தோலை உரிப்பதற்குத் தயாராயிருக்கின்றன. கசைஅடி அடிக்க வேண்டிய குற்றவாளிகளையும், சித்ரவதை செய்யவேண்டுமென்று கருதப்படுபவர்களையும் சர்வீஸ் கார்களில் ஏற்றி இந்த ரோடுகளில் பிரயாணம் செய்வித்தலே போதியதாகும். நாட்டின்பெரும் பாகத்தில் இம்மாதிரி ரோடுகள் எளிதாகக் காணக்கிடைக்கின்றன. நடுரோட்டிலுள்ள குழிகளின் ஆழம் ஒரு கஜத்திற்கு மேலும் இருக்கிறதென்றால் ரோடின் சீர்கேட்டை என்னென்றுரைப்பது? மழை காலத்தில் உழுதுவிட்ட வயலைப்போல ரோடுகள் காணப்படுகின்றன. இதில் பழுது பார்க்க நியமிக்கப்படும் மேஸ்திரிகள் செய்யும் கொடுமைகள் கொஞ்சமன்று. படுகுழி நிறைந்த ரோடுகளில் சரளைக் கற்கள் இருபுறமும் குவிக்கப் பெற்று பலமாதங்கள் வரை பரப்பப்பெறாது கிடக்கின்றன. குறுகிய வழிகள் பல இவ்விடைஞ்சலால் துன்பத்தை உண்டாக்குவது கண்கூடு. எப்பொழுதாவது பல வருஷங்கட்கொருமுறை குத்தகை விட்டுப் பழுது பார்க்கப்படும் ரோடுகள் நிலைத்து நன்னிலையிலிருப்பதில்லை. காரணம் சரியானபடி கெட்டிப்படுத்தாமையேயாகும். சரளையைக் கொட்டி உருளையை உருட்டி விடுதல், சந்தை வண்டிப் போக்கு வரத்திற்கு ஒருவாறு போதியதாக இருக்கலாம். இப்பொழுதுள்ள நிலைமையில் இம்மாதிரி போடப்படும் ரோடுகள் மூன்று மாதம்கூட நிலைப்பதற்கு வழியில்லை. எஞ்சின்களைக் கொண்டு ரோடுகள் செப்பனிடப்பட வேண்டுமென்பதை அதிகாரிகள் உணர்வார்களாக.

இவ்வளவிற்கும் மிகுந்த பணம் தேவையிருக்குமென்பது உண்மையே. உள் நாட்டில் பிய்த்துப் பிடுங்குவதால் மட்டும் காரியங்களைச் சீர்பெற நடத்த முடியாது. மத்திய அரசாங்கத்திலிருந்து ரோடுகளுக்காகப் பெருந்தொகை பெறுவதற்கு முயற்சிகள் செய்தல் வேண்டும். ஜில்லா, தாலூகா போர்டார்கள் கூடியவரை செட்டான முறையைக் கையாண்டு ரோடுகளைப் பாரமரித்தல் அவசியமாகும். எப்படியும் ரோடு வசதி இந்நாட்டில் மிகக் குறைவாக இருக்கிறதென்பதை உணர்ந்து சீர்படுத்தும் முறையைக் காண வேண்டுவது அரசாங்கத்தார் கடமையாகுமென்பதை மீண்டுமொருமுறை கூற வேண்டியதில்லை.

---

## எண்டிசைக் காட்சி.

### புத்திகெட்ட வைதீகம்.

மலையாள நாட்டைச்சார்ந்த பொன்னனி என்ற ஊரிலுள்ள பதினெட்டு வயது நம்பூதிரி விதவைப் பெண்ணொன்று ஒரு நம்பூதிரி இளைஞனோடு எங்கோ போய் விட்டாள். இதற்காக அப்பெண்ணின் வீட்டாரை அங்குள்ள நம்பூதிரிகள் ஜாதியை விட்டுத் தள்ளிவிட்டார்களாம். ஒரு இளம் பெண்ணை விதவையாக்கிவைத்துப் பார்த்துக் கொண்டிருப்பதே கொடுமையாகும். ஆற்றாமையினால் பெண் வெளியேறிப் போனால் ஜாதிக்கூட்டம் கூட வேண்டியது என்ன அவசியமென்பது விளங்கவில்லை. குருட்டு வைதிகப் பிடிப்பினால் அறிவிழந்த வைதீக மூட்டைகள் பெண் பிறந்த குடும்பத்தாரைத் தள்ளிவைத்து விட்டனர். பெண் ஓடிப் போனதற்குக் காரணம் குருட்டுத்தனமான ஜாதிக்கட்டுப் பாடேயாகும். அக்கட்டுப்பாட்டிலிருந்து பெண்ணானவள் மீறிச்சென்றதற்காக ஒரு பாவமும் செய்யாத அக் குடும்பத்தாரைத் தள்ளிவைத்துத் துன்புறுத்துவது எவ்வளவுகொடுமையாகும்? வைதீகக் கொடுமைகள் ஒழிகிறவரை இந்த நாட்டிற்குக் கதிமோட்சம் வரப்போவதில்லை யென்பது திண்ணம்.

### நாலில் ஒன்று.

ஆக்ஸ் போர்டு சர்வ கலாசாலையில் படிக்கும் பெண் மக்களின் தொகை அறுநூற்றிருபதுக்கு மேல் போகக் கூடாதென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. அதில் படிக்கும் ஆண் மக்களின் தொகையில் நானில் ஒரு பங்கு பெண் மக்கள் தான் படிக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆணும், பெண்ணும் சமத்வம் என்று கருதப்பட்டுவரும் மேல் நாட்டில் பெண் மக்களை அடக்க நினைப்பதன் காரணம் விளங்கவில்லை. மிஸ் மாக்கர் பிளே என்பவர் இப்பிரேரணையைப் பலமாகக் கண்டித்தாரெனினும் தீர்மானம் நிறைவேறிவிட்டது.

### உலை வைத்தல்.

அரசியல் நெறியில் சிறிது உயிர் பெற்று நிற்பது கதர் இயக்கம் ஒன்றேயாகும். கதர் ஒன்றினைத் தான் காந்தியடிகள் கைப்பிடியாகப் பிடித்து நிற்கின்றார். அதற்கும் உலை வைப்பதற்குச் சில மகான்கள் முயன்று வருவதாகத் தெரிகிறது. சென்ற வாரத்தில் திரு. ஸ்ரீநிவாசய்யங்காரின் மன நிலை வெளியாயிற்று. ஸ்ரீமான் போபத்கார் என்பவர், "கௌஹத்திக் காங்கிரசின் தீர்மானத்தில், கைராட்டினத்தில் நூற்று கைத்தரியில் நெய்யப்பெற்ற கதராடை, என்றிருப்பதற்குப் பதிலாக சுதேசி ஆடை, என்ற வார்த்தைகளைப்போட வேண்டும்" என்று அடுத்த காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஓர் தீர்மானம் கொண்டுவரப் போகிறாராம். நல்ல காரியம். இப்படி ஆட்கள் தோன்றித்தான் நாடு நன்மை பெறவேண்டும்! இந்தியாவிலிலேயே நூல் நூற்று இங்கேயே நெய்யப்படும் கதராடையை வேண்டாமென்னும் இவர், சுதேசி ஆடையென்று எதைச் சொல்லுகிறாரென்பது தெரியவில்லை. தேசிய உணர்ச்சி தற்போது கதர் ஒன்றினாலேயே சிறிது ஒளிபெற்று நிற்கிறது. அதனையும் ஒழிப்பதற்குத் தலைவர்கள் முயற்சி செய்தல் காட்டைப் பிடித்த பாவம் போலும்!

### ஜீவகாருண்ய உணர்ச்சி.

உயிருள்ள பிராணிகள் மீது வைத்திய ஆராய்ச்சியின் பொருட்டு மருந்துகளைப் பிரயோகிப்பது கூடாது எனும் நோக்கோடு லண்டனில் ஒரு கூட்டம் கூடியது. திரு. பெர்னார்டு ஷா தலைமை வகித்தார். அங்கு வந்திருந்த இருநூறு வைத்திய மாணவ, மாணவிகள் சேர்ந்து சத்தம் போட்டும் ஊதுகுழல் கொண்டு ஊதியும் கூட்டத்தை நடக்கவொட்டாது செய்தனர். இவருடைய பெரிய எதிர்ப்பைக்கண்டு போராடுவதிற் காரியமில்லை யென்று தலைவர் விட்டுவிட்டார். மேனாட்டு வைத்திய ஆராய்ச்சியால் எண்ணற்ற பிராணிகள் மீளாதநோய்வாய்ப்படுவதும் இறந்தே போவதும் சகிக்க முடியாத காரியமாகும். பல பிராணிகளின் உடற்சத்திலிருந்தே அன்னாட்டு மருந்துகள் தயாரிக்கப் பெறுகின்றன. இவ்விஷயத்தில் சிறிது பேசிப் பார்க்கலாமென்று எண்ணங்கொண்டு திரு. பெர்னார்டுஷா போட்ட கூட்டம் நடக்க முடியாது போயிற்று. இதனால் அங்குள்ள மாணவரின் மனப்பான்மை ஜீவகருணையைப்புறக்கணித்துஆராய்ச்சித்

---


நவைசிய சமூக அநுபந்தம் உ0




உ
சிவமயம்.
மரகத விநாயகர் துணை.

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே."

நாட்டுக்கோட்டையா நக்கு மாத்திரம் அனுப்பப்பெறும்.

"அலயந் தொழுவது சாலவு நன்று." "திரைகட லோடியுந் திரவியந் தேடு."


காரைக்குடி, பிரபவ-ஞ ஆனி-மீ கூஉ (23—6—27.)


மாவாழ மேழ வழிநகரத் தார்க்கென்றுங்
கோவாழுஞ் செல்வக் குலதெய்வ-மாவாழ்
மரகதவி நாயகனை மாமலர்தூய் வாழ்த்த
வரநலவாழ் வெல்லாம் வரும்.

—நகரத்தார் சரித்திரம்.

## கூட்டம் வேண்டுமா ?

சில அன்பர்கள் தொண்ணூற்றுரூர்க் கூட்டம் வேண்டுமா? என்ற கேள்வியை எழுப்புகின்றனர். இவ்வாறான ஐயம் உண்டாதல் இயல்புதான். கூட்டத்தின் தீர்மானங்கள் அமுலில் வாராதவிடத்து அக்கூட்டமும் தீர்மானமும் அவசியமாவென்று யோசிக்க வேண்டியது அவசியமேயாகும். கூட்டத்தில் செய்யப்படும் தீர்மானங்கள் இந்த சமூகத்தில் எவ்வளவு தூரம் அமுலுக்கு வருமென்பது யாவரும் அறிந்த ரகசியமாகிவிட்டது. கூட்டத்தின் முகவணையிலிருந்து யார் பேசித்தீர்மானித்தார்களோ அவர்களே கட்டுப்பாட்டை மீறுபவர் கூட்டத்திலும் முகவணையிலிருக்க விரும்புகின்றனர். கொஞ்சங் கொஞ்சமாகப் பெருகித் தாங்கமுடியாத நிலைக்கு வந்து சேர்ந்துவிட்டது. மிகச் சிறிய தீர்மானங்களைக்கூட அனுவசியமாக மீற முயல்கின்றனர். காப்கறி பலகாரம் முதலிய சப்பையான விஷயங்களைக்கூட விட்டு வைக்க மனமில்லாத ஜனங்களிடத்திலிருந்து வேறென்ன காரியத்தைத்தான் எதிர்பார்க்கக்கூடும்? நோய் பெரிதாகி விட்டது. எடுத்துக் கூறும் போது நல்லதுதானென்று எல்லாரும் ஒப்புக்கொள்கின்றனர். செய்கையில் அவர்களால் முடியவில்லை. அவ்வளவுதூரம் பழகிவிட்டனர். தாங்களாகவாவது வேறொருவருடைய சொல்லைக் கேட்டாவது திருத்தமுறுகிற நிலையினின்றுங்கூட இக்கூட்டத்தார் விலகிவிட்டனர். என்னகாலத்திற்கு இப்படிச் சென்று கொண்டிருக்கின்றனரென்பது விளங்கவில்லை. வா வா விஷம் ஏறுவதுபோல ஏறிக்கொண்டே செல்கிறது. இந்நிலையில் கூட்டம் வேண்டுமா அதனால் பயனுண்டா என்ற விஷயங்கள் கவனிக்கத்தக்கனவே யன்றோ?

கூட்டமானது எப்பொழுதும் மக்களைக் கட்டுப்படுத்த முடியாது. மக்கள் அதற்கு மதிப்புச்செலுத்தி வாழமுற்பட்டால்தான் கூட்டத்தால் விளையும் நன்மைகள் புலப்படும். சுயநல நோக்கமொன்றையே கொண்டு அதனையும் போலிமுறையில் கையாள முற்படுவதனாலேயே கூட்டத்தின்பெருமை புலனாகவில்லை. கூட்டம் உரம்பெற நடந்தாலல்லது இச்சமூகம் நலம்பெற வேறுவகைகிடையாதென்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். ஒரு குழுவினர் ஒன்று சேர வகையில்லாவிட்டால் மனம் போனபடி நடந்து சிதைவுற்று அழிந்துபோக வேண்டி நேரிடும். எப்படியாவது ஒரு சமூகத்தினர் யாவரும் கூடிச் சில தீர்மானங்கள் செய்வதால் சமூகப் பொது உணர்ச்சி குன்றாது நிற்கும். பல நாளாகக் கூட்டமில்லாது போனபடியினால்தான் ஒவ்வொருவரும் மனம்போனபடி காரியங்களை நடத்திச் சிதைவுற நேர்ந்திருக்கிறது. கூட்டத் தீர்மானம் அமுலில் வந்தாலும் வாராவிட்டாலும் கூடிப் பேசிச் சில தீர்மானங்களைச் செய்வதால் உணர்ச்சி வளரும். பின்னர் செயலில் வருதலுங்கூடும். இப்போது செய்யப்பட்டுள்ள தீர்மானங்களை அனுபவத்திற்குக் கொண்டுவர முடியவில்லையானால் தீர்மானங்களை வேறுவகையில் செய்ய முற்படலாம். காங்கிரஸ் காண்பரன்ஸ்களைப் போன்று உணர்ச்சியுண்டாக்கும் பல தீர்மானங்களைச் செய்யலாம். சமூக சம்பந்தமாகத் தனக்குத்தானே வளரக்கூடிய விஷயங்கள் பல உண்டு. அவைகளைப்பற்றித் தீர்மானங்கள் செய்து பிரசாரமூலமாக வேலை செய்யலாம். கட்டுப்பாட்டு மூலமாகச் சீர்திருத்தஞ் செய்யமுடியாதென்று தீர்ந்தால் கூட்டமானது தானே வளரக்கூடிய வழியை

யொட்டி நடைபெற வேண்டியது தான். எந்த விதத்திலும் பொதுக் கூட்டத்தைக் கைவிடாது நடைபெறச் செய்யவேண்டியது நம்மவரின் கடமையாகும்.

## குறிப்புக்கள்.

புதுமை, கல்யாணம் முதலிய விசேஷ காலங்களில் சாப்பாட்டு விசாரணை வரவரத் தாங்க முடியாத விதத்தில் வளர்ந்து வருகிறது. சிறிய விசேஷங்கள் கூட மிகப் பெரிதாகித் துன்பத்தை வளர்த்து வருகின்றன. முன்னாளில் கல்யாணங்கட்கு ௬௦௦ பேருக்குமேல் கூடுவது அருமையாக இருக்கும். இப்போது தீர்த்தங் குடிப்பதற்குக் கூட ஏராளமானவர்களை அழைக்கின்றனர். விசேஷங்கட்கு வருபவரின் பசியை ஆற்றவேண்டுமென்ற உணர்ச்சி போய் விட்டது. உணவு வகை எத்தனை வைப்பதென்ற நியதியு மில்லை. வெளியூர்களிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் உணவு வகை வரவழைக்கப் படுகின்றன. உண்பது ஒருபங்கு விழுவது பல பங்காகும்.

ஃ ஃ

வர்க்கான்னங்களும் பலகாரங்களும் பழங்களும் அன்னிய நாட்டு உணவுப்பொருள்களும் ஏராளமாக இலையிற் போடப்பட்டுக் குப்பையைச் சார்வது அநியாயமாகும். மனிதனுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவு பரிமாறப்படவில்லை. விழுந்துமென்று தெரிந்தே செய்ய வேண்டியிருக்கிறது. அளவுகடந்து செய்யாவிட்டால் மதிப்புக்குறைந்து விடுமோ வென்று அச்சமுறுகின்றனர். தாறுமாறுகச்செய்யாதிருப்பவரைப் பலர் லோபி என்று பழிப்பதையும் காணலாம். சமூக நிலையானது இவ்வழியில் எவ்வளவு தூரம் கெட முடியுமோ அவ்வளவுதூரம் கெட்டிருக்கிறது.

ஃ ஃ

ஒவ்வொரு விசேஷத்தையும் இரண்டொரு நாளில் நடத்திமுடிப்பது எல்லாருக்கும் சௌகரியமாக இருக்கும். முன்னாளில் பல நாள் கூடியிருந்தாலும் கஷ்டமாவது வீண் செலவாவது ஏற்படுவதில்லை. விசேஷத்திற்குக்கூடியிருக்கிற ஆண் பெண்யாவரும் வேலைபார்ப்பார்கள். வேலைக்காரர் கூட்டுவது பெரும்பாலாக இல்லையென்றே கூறலாம். ஆடம்பரமில்லாத சாப்பாடே நடைபெறும். பங்காளிகளும் சுற்றத்தாருமாகச் சிலர்தான் வந்திருப்பார்கள். இந்நிலையில் பலநாள் விசேஷம் நீடித்து நடைபெற்றாலும் கஷ்டமாக இருக்கவில்லை.

ஃ ஃ

இப்போது நிலைமை மிகவும் மாறிவிட்டது. கல்யாணத்திற்குச் சில இடங்களில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடுகின்றனர். சமையற்காரரும் வேலைக்காரரும் நூற்றுக்கணக்காக அழைக்கப்படுகின்றனர். ஆள் கூட்டஞ் சேர்த்து விசேஷத்தைப் பெரிய தும்பாபிஷேகமாக்க முயன்றுவருகின்றனர். முன் பின் தெரியாத பலர் விசேஷங்கட்கு அழைக்கப்படுகின்றனர். அவர்களும் வருகின்றனர். கல்யாணத்துக்கு வருபவரிற்பலரும் பெண்ணையாவது மாப்பிள்ளையையாவது பார்க்க முடிகிறதில்லை.

ஃ ஃ

சாப்பாட்டுநாளைக் கட்டாயம் குறைத்துத்தீர வேண்டும். நாலுநாள் ஆறு நாள் எட்டு நாள் என்று கூடிச்சாப்பிடுவது பெருங் கஷ்டமான காரியம். அனாவசியமுமாகும். சுற்றத்தாரல்லாத ஏனையோரின் சாப்பாட்டைப்பற்றிய திருத்தம் இன்றியமையாததாகும். விசேஷ நாளன்றாவது அல்லது வேறொரு நாளிலாவது தனியாக ஒரு வேளை விருந்து வைக்கப்பெறலாம். அன்று வந்தவர்க்கு உணவளிப்பதோடு அது முடிந்துபோதல் வேண்டும். வாராதவர்களைத் திரும்பத் திரும்ப அழைத்து விருந்து வைப்பது அனாவசியமும் வீண் சிரமமுமாகும். உணவு விஷயத்தில் வீணான அவஸ்தையை உண்டாக்கிக்கொண்டுவிட்டனர். சிலர் துணிந்து சீர்படுத்தினாலல்லது வழக்கு வாமுடியாது.

ஃ ஃ

பிராமணர் வீட்டில் பந்தி பரிமாறுதற்கு மிகச்சிலரே நிற்கின்றனர். நூறு பேருக்கு இரண்டு மூன்று பேர் நின்று பரிமாற முடிகிறது. நம்மவரில் அப்படியில்லை. நூறு பேருக்கு ஐம்பது பேர் நின்று பரிமாற வேண்டும். காரணம் ஒரே முகமாகப்பரிமாற முடிகிறதில்லை. ஒருவர் குழம்பு கேட்கிறார்; அதே சமயத்தில் மற்றொருவர் ரசம் கேட்கிறார்; வேறொருவர் மோரையும் பிறிதொருவர் பாயசத்தையும் விரும்புகிறார். இதற்கிடையில் ஒருவர் சாப்பாட்டை முடித்துக்கொண்டு எழுந்து போகிறார். கொள்ளும் முறையாலும், நேரவித்தியாசத்தாலும் ஒற்றுமையான சாப்பாட்டு முறை நிகழ முடியவில்லை. சிறிது பொறுமையாக இலைக்கு முன்னர் இருக்கவும் விரும்புகிறார்களில்லை. இக்காரணங்களால் தான் பந்திக்கு முன்னர் பல பேர் நின்று சத்தம் போட்டு அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறது.

தனவைசியன்.

## துணிவுதான் தேவை.

பெண்ணுக்குப்பணம் வாங்குவது ஒரு வரம்புக்குள் கட்டுப்படுவதாக இல்லை. தற்போது ஐம்பதாயிரம் வரை தொகை யேறிவிட்டது. ஏழை எளியவருக்குப் பிரமசரிய விரதமும் வியபிசார வாழ்க்கையுமே தலை யெழுத்தாகிவிட்டன. கடன் வாங்கிப் பணங் கொடுத்துக் கல்யாணம் செய்து கொண்டால் அப்பெண்டாட்டியும் நிச்சயமில்லை. வேறு கட்டிக் கொள்ள வகையுமில்லை. இவ்வளவு ஆபத்தான நிலைக்குப் பரிகாரமென்ன? பணம் நிறைய வைத்திருப்பவர் கவலைப்பட வேண்டியதில்லை. விரும்பினால் மாதமொரு கல்யாணம் செய்து கொள்ளலாம். பணக்காரர் வீட்டுப்பெண் மறந்தும் ஏழை வீடுகட்கு வருவது கிடையாது. ஏழை வீட்டுப் பெண்கள் பணக்காரர் எப்பொழுது வாய் திறப்பார்களென்று காத்திருக்கின்றன. சிலர் ஆறுதாரம் வரை விரும்பிக் கல்யாணம் செய்து கொள்கின்றனர். அவர்களுக்குப் புதிது புதிதான பெண்கள் எளிதிற் கிடைக்கின்றனர். மனைவி வேண்டுமென்று சாதாரணமானவர் கருதுதற்கும் இடமில்லை. ஏதாவது சரியான வழியைக் கண்டு பிடிக்க வேண்டியது தான். அவ்வழி இப்போது கூடப் போகிற கூட்டத்தில் யோசிக்கப் படவேண்டும். அதன் வழி நடைமுறைக்குக் கொண்டுவருதல் அவசியமே. சிலருடைய போலிக் கௌரவத்திற்காகப் பலர் திண்டாடி நிற்றல்சரியன்று. இளைஞர் மனம் எழுச்சியுறல் வேண்டும். முனைந்து சில வழிகளைத் திறந்துவிடுதல் அவசியமாகும். புதுவழி முதலில் பயமாகத்தான் இருக்கும். பின்னர் சரியாகிவிடுவதியல்பு. இனிப் பொறுத்திருத்தல் சரியன்று. கல்யாணமின்றி ஆயிரக்கணக்கான வாலிபர் வற்றே துன்புற்றிருப்பது நியாயமாகாது. ஒருவனுடைய ஆயுள் காலம் முழுமையும் பாடுபட்டுத் தேடிச்சம்பாதித்தாலும் ஒருபெண்ணை வாங்கமுடியாத நிலைக்கு வந்துவிட்டது. விரைவாக யாவருக்கும் கல்யாணம் முடிதல் வேண்டும். தைரியமும் இரக்கமுமிருந்தால் வழிகள் பல இருக்கின்றன. துணிந்து இறங்கியாக வேண்டியதுதான்.

நன்மைநாடி.



துறையில் விடுபட்டிருக்கிறதென்பது விளங்கும். ஆராய்ச்சித் துறையைவிட ஜீவகாருண்யம் ஆயிரமடங்கு மேம்பட்டதென்பது இந்துக்களின் கருத்தாகும்.

### லிட்டனின் திருவாக்கு.

வங்காளக் கவர்னாயிருந்து இழுபட்டலிட்டன் பிரபு லண்டனில் நடைபெற்ற விருந்தொன்றில் தமது பெருமையைப் பின்வருமாறு கூறினார் :—

"புரட்சி இயக்கம், சட்ட வரம்பிற் குட்பட்ட நாச இயக்கம் ஆகிய இரண்டையும் நான் எதிர்த்துச் சமாளிக்க வேண்டியிருந்தது. கவர்மெண்டு யந்திரம் வேலை செய்ய முடியாதபடி அதைத் தடுத்து விடுவதே அந்த இரண்டினுடைய நோக்கம். இரண்டு இயக்கங்களும் அடியோடு தவறிப் போய்விட்டன. அவை தவறிப்போய் விட்டதைக் கண்டு பொது ஜனங்கள் திருப்தியே அடைந்திருக்கின்றனர்."

வங்காளத்தில் சுயராஜ்யக் கட்சியாரிடம் லிட்டன் பிரபு பட்ட பாட்டினை உலகத்தார் அறிவர். கவர்மெண்டு யந்திரம் மூச்சுப் பிடித்துத் திணறிப்போனது வாஸ்தவம். அவ்வியக்கங்கள் தவறிப் போகும்படி செய்த பெருமை தன்னுடையதென்று மார்பு தட்டுகிறார். இதனை நம்மவர் கூர்ந்து நோக்குதல் வேண்டும். இவ்வியக்கங்கள் தவறிப்போனமை கண்டு பொது ஜனங்கள் திருப்தி அடைந்திருக்கிறார்கள் என்று லிட்டன் பிரபு கூறுவது சுத்தப் புரட்டாகும். பொது ஜனங்கள் என்ற சொல்லுக்கு இந்தியாவிலுள்ள ஆங்கிலோ இந்தியர்கள் என்று லிட்டன் பிரபு பொருள் கொண்டார் போலும்!

### வந்தேமாதரம்.

ஆஜ்மீர் பகுதியிலுள்ள கிசான் பஞ்சாயத்துத் தலைவர் எழுதுகிற கடிதங்களில் வந்தே மாதரம் போட்டு எழுதி வந்தாராம். அதிகாரிகள் அப்படிப் போடக் கூடாதென்று கண்டிக்கவே தலைவர் பின் வாங்கி விட்டாராம். பின்னர் எழுதிய கடிதங்களில் வந்தேமாதரம் போடப்படவில்லை. இதனை அறிந்த ஜனங்கள் தலைவரை நீக்கி வேறு தலைவரை நியமித்து விட்டனர். எவ்வித கஷ்டம் நேர்ந்த போதிலும் பொருட்படுத்தாது கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காக ஒவ்வொரு கடிதத்திலும் 'வந்தேமாதரம்' போட வேண்டு மென்று கூறி யிருக்கின்றனராம். தலைவருக்காகக் கொள்கையை விடாமல், கொள்கைக்காகத் தலைவரை வெளியே இழுத்துவிட்டது பாராட்டத்தக்கது. 'வந்தேமாதரம்' என்ற சொல்லிற்குத் 'தாயைவணங்குகிறேன்' என்பது பொருளாகும். இதனைக் கண்டு அதிகாரிகள் புத்தி புரண்டு போனது ஆச்சரியமே.

### புராணிகர் மாளவியா.

தென்னாட்டில் புராணிகர் பலருண்டு. 'புராணம் படிப்பது தமக்கல்ல, பிறருக்கே' என்பது அன்னவர் கொள்கை. பாலும், பழமும் நிறைய உண்டு விட்டு, பட்டை, பட்டையாக விபூதி, ருத்திராக்ஷம் தீட்டிக்கொண்டு, கூலிப்பணம் பெற்றுக்கொண்டு, கோவில்களிலிருந்து புராணம் படிப்பவரின் உள்நிலையை விசாரித்தால் முழு மோசமாக இருப்பது வழக்கம். நமது தேசியத் தலைவர் பண்டித மாளவியா சிறந்த படிப்பாளி. புராணம் ஓதுவதில் நிபுணர். இப்பொழுது பெங்களூரில் தங்கியிருக்கும் இவர் அங்குள்ள வைதிகர் சிலருடன் தாழ்ந்த வகுப்பினரைக் கோயிலினுள் விடுவதைப்பற்றி விவாதித்தாராம். சமஸ்கிருத பாஷையிலேயே நடைபெற்ற இவ்விவாதத்தில்பண்டிதமாளவியாவே வெற்றி பெற்றார். இந்த மட்டில் தாழ்ந்தவகுப்பார் ஆலயத்துட் செல்லலாமென்ற சாஸ்திரக் கருத்தை மாளவியா விளக்கி நிலைநாட்டிவிட்டார். இவ்விஷயமானது நமக்குப் பெருமகிழ்ச்சியைத் தருகின்றது. ஆனால், மாளவியாவைப் பொறுத்தமட்டில் அவர் ஒரு புராணிகராகவே விளங்குகின்றார். லட்சுமிகாந்த பட்டர் என்பவர் மாளவியாவின் மகனுக்குப்பெண் கொடுத்த சம்பந்தியாவர். மாளவியாவின் குலம் உயர்விலும் உயர்வானதாம்! லட்சுமி காந்த பட்டரின் மற்றொரு குமாரத்தியை, சொந்தக்குலத்தில் மணமகன் கிடைக்காததால் அடுத்தபடியான ஒரு பிராமண குலத்தில் கலியாணம் செய்து கொடுத்திருக்கிறார். இக்குற்றத்திற்காகப் பண்டித மாளவியாவின் வீட்டிலேயே ஒரு கூட்டம் கூடி லட்சுமி காந்தபட்டரின் குடும்பத்தாரைச் சில நாட்கட்கு முன் ஜாதிப்பிரஷ்டம் செய்து விட்டார்கள். மேற்படி பட்டரின் மனைவி சாகும் சமயத்தில் தனது புதல்வியைப் பார்க்க வேண்டுமென்று விரும்பினாராம். நமது மாளவியா குடும்பத்தார், ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்ட தாயாரைப் பார்க்கக்கூடாதென்று நாட்டுப்பெண்ணை அனுப்பவில்லையாம். எவ்வளவு படித்திருந்தாலும், எவ்வளவு வேதாந்தம் பேசினாலும் வைதிகம், வைதிகந்தான்! அந்த மூட்டை, அறிவையும், இரக்கத்தையும், ஆற்றலையும் மழுக்குவது கண்கண்ட காட்சியாகும்'.

### சம்பாவனை.

கோநகர் திருவாளர் கு. அ. ப. அருபழனியப்ப செட்டியாரவர்கள் தமது தந்தையாருக்கு நேற்று நடைபெற்ற ஷஷ்டியப்த பூர்த்தி சாந்திகல்யாணத்தில் நமது குமரனுக்கு ரூபா ஐந்து சம்பாவனை செய்தனுப்பியுள்ளார்கள். அவர்கட்கு எமது நன்றி உரியதாக.

#### கண்டனூர்.

இவ்வூர் முருக விலாஸ் பந்தடிமாலின் சார்பாக நடைபெறும் பரிசு விளையாட்டு நாளது மீ" கசுஉ யன்று முடிவுறும். அன்று காலையில் வெற்றி பெற்றவர்கட்கு பந்தடி மாலிலேயே பரிசுப் பதக்கம் அளிக்கப்படும்.

ஃ ஃ

#### சிறுகூடற்பட்டி.

இவ்வூர் நகரத்தார் கலைமகள் வித்தியாசாலையின் இரண்டாவது வருஷக் கொண்டாட்டம் நிகழும் பிரபவஹூ ஆனிமீ" கஉஉ ஞாயிற்றுக்கிழமை யன்று, காரைக்குடி ஹைஸ்கூல் ஹெட் மாஸ்டர் ஸ்ரீமான் N. S. வெங்கட்ட ராமய்யர், M. A. L. T தலைமையில் நடைபெறும்.

ஃ ஃ

#### ஆத்தங்குடி—முத்துப்பட்டணம்.

நாவுக்கரசு நற்சபை:— இச்சபையின் இரண்டாவதாண்டு உ-வது மாதக்கூட்டம். நாளிது ஆனித் திங்கள் ஆறாம்நாள் பிற்பகலில் திருமாதவய்யங்காரவர்கள் கடவுள் வாழ்த்துக்கூற பிர்மஸ்ரீ முத்துஸாமி ஐயங்கார் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்களான சித. நாராயணன் செட்டியார், அழ. அருணாசலச் செட்டியார், கும்பகோணம் சந்திரகாசன் இவர்கள் முறையே "விரதம், பக்தி, ஒற்றுமை," என்ற விஷயங்களை செவிக்கமுதெனச் செப்பின பிறகு தலைவரவர்கள் அரிய மேற்கோள் முடிவுரையுடனும் வந்தன வாழ்த்துடனும், இரவு எ—சுடு ம்மணிக்கு சபை இனிது நிறைவேறியது. என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | ０—ஙு—０ |
| ரங்கூன் உண்டியல் வட்டம் | ௧—௪—０ |
| பவுன் (பொற்காசு) | ௧௬—௧௨—０ |
| வெள்ளி ரூபா எடை | ０—௧௦—０ |

நாகநாதபுரம் சிவன் கோவில்:—இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும்ஸ்ரீநாகநாதசுவாமிக்கு நடைபெற்ற பிரமோற்சவம் சென்ற சனியன்று சிறப்பாய் முடிந்தது. திருவிடை மருதூர் வீருச்சாமியின் நாதசுரம் நடைபெற்றது.

இடமாற்றம்:— கோட்டையூர் ரஸதாவிலிருந்த டாக்டர் கிருஷ்ணமூர்த்தி அவர்களது வைத்தியசாலை கல்லுக்கட்டி மேல் கரையிலுள்ள எஷ்யாடிக் பெட்ரோலியம் கம்பெனிக் கட்டிடத்து மேல்மாடிக்கு மாற்றப்பட்டுள்ளது என அறிவிக்கப்படுகிறது.

### சீதோஷ்ண ஸ்திதி.

| | |
|---|---|
| உயர்ந்த அளவு | ௯௯.௦ |
| குறைந்த அளவு | அ௫.௦ |

## தந்திச் செய்தி.

பினங்கு, ஆனி மீ" ௩௨

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்றைம்பத்துநான்கு |
| ஈயம் விலை | நூற்றுநாற்பத்தேழு. |
| ரப்பர் விலை | எழுபத்தேழு |

### இரங்கூன்.

ஆனிமீ" ௬உ

தனவணிக இளைஞர் சங்கத்தின் ஆதரவில் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கக்கட்டிடத்தில், நாளிது ஜூன் மாதம் ௬உம் நாள் திங்கட்கிழமை திருவாளர் வி. எஸ். ஏகாம்பரம் அவர்களது (ஹைகோர்ட்டு அட்வகேட்) அவைத் தலைமையில் மதுரை வக்கீல் திருவாளர் எஸ். சோமசுந்தர பாரதியாரவர்கள் 'முற்காலத் தமிழர்களும் தற்காலத்தமிழர்களும்' எனும் பொருள்பற்றி சுமார் கஇ மணி நேரம் ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர்கள்.

சிற்றுண்டி விருந்து:— பாரதியாரது பர்மாவிஜயத்தை முன்னிட்டு நாளிது ஜூன் மாதம் ௧௯ம் நாள் வியாழக்கிழமை அன்று மாலை சிற்றுண்டி விருந்து ஒன்று அவருக்கு நடத்தப்பட்டது. திருவாளர்களான பி. கு. நா. சோமசுந்தரம் செட்டியார், ராம. பத்மநாப ராஜு, மு. சோமசுந்தரம் செட்டியார் முதலியவர்கள் பாரதியாரின் குணவிசேஷங்களைப் பற்றியும் தமிழ் மொழியில் அவருக்குள்ள அளவிலாப்பற்றைப்பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியதோடு அவருக்கு நீண்ட ஆயுளையும் ஆரோக்கியத்தையும் எல்லாம்வல்ல இறைவன் வழங்குமாறு பிரார்த்தித்தனர். விடையிறுக்குமுகத்தான் திரு. பாரதியாரவர்கள் சுமார் கஇ மணிநேரம் பேசினர்கள். தனவணிக இளைஞர் சங்க அங்கத்தவர்களுக்கு நற்புத்திமதிகள் கூறினர்கள்.

அநுதாபக்கூட்டம்:— நாளிது ஜூன் மாதம் 19ம் நாள் தனவணிக இளைஞர் சங்கக் கட்டிடத்தில் ஷை சங்கத்தார்கள், நடராஜபுரம் திரு. ஆத. ஆ. சொக்கலிங்கம் செட்டியாரது மரணத்தை முன்னிட்டு ஓர் அநுதாபக்கூட்டம் கூட்டினர். அவரது மரணத்திற்கு வருந்துவதாக ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## கப்பற் செய்தி,

"எல்பெண்டா" கப்பல் நாளை சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படுகிறது.

"சிர்தாநு" கப்பல் கஉஉ ஞாயிற்றுக்கிழமை நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குச் செல்லும்.

"ரதூலா" கப்பல் மலாய் நாட்டிலிருந்து ககவ சென்னைக்கு வரும். ககவ நாகபட்டனத்திலிருந்து மலாய் நாட்டிற்குச் செல்லும்.

## செய்தித் திரட்டு.

#### கல்லுப்பட்டி.

இவ்வூர் சன்பிளவர் புட்பால் டீமின் முதலாவதாண்டு விழாக் கொண்டாட்டம் ஷை புட்பால் திடலில் ஆனி கஉஉ நடைபெறும்.

ஃ ஃ

#### அருப்புக்கோட்டை.

நாளது ஹூ ஆனிமீ" கஉ முதலாளி மு. மு. முத்துசாமி நாடார் ஞாபகச் சின்ன வாசகசாலையின் வருடப்பூர்த்திவிழா நடைபெற்றது. வெளியூர்களிலிருந்தும் சில பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். இவ்வூர் அமெரிக்கன் மிஷின் பாதிரியார் ரெவெரெண்டு இ. இ. ஒயிட்டு துரையவர்களை ஊர்வலமாக, நாடார்கள் எலிமெண்டரி பாடசாலை ஹாலுக்கு அழைத்துவந்ததும் கூட்டம் ஆரம்பமாயிற்று.

அ. அண்ணாமலை அவர்களால் கடவுள் வணக்கம்பாடப்பெற்றதும்வாசகசாலையின், பிரஸிடெண்டு ஸ்ரீமான் சொ. ஆ. சொக்கலிங்க பாண்டியர் அவர்கள் வரவேற்புப்பிரசங்கம் செய்தார்கள். கனம் ஒயிட்டுதுரையவர்கள் அக்கிராசனம் வகித்து முன்னுரையாகத் தமிழில் ஒரு அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். அக்கிராசனர் அமெரிக்கா தேசத்திலே பிறந்து வளர்ந்து, ஆங்கிலத்தையே தாய்பாஷையாக கொண்டிருந்தாலும், தமிழில் சிறிதும் தவறுதலின்றி இனிமையாகப் பேசினது சபையோரின் முழுக் கவனத்தையும் கவர்ந்துவிட்டது.

பின்னர் காரியதரிசி ஸ்ரீமான்வனுநாதர் அவர்கள் ரிப்போர்ட் வாசித்ததும், திருவாளர் பி. ஸ்ரீனிவாச ஆச்சாரியார் அவர்கள் "குகன் கொள்கை" என்பது பற்றியும், நாடார் ஹைஸ்கூல் தலைமை தமிழ் பண்டிதர் ஸ்ரீமான் துரைச்சாமி நாடார் அவர்கள் "தருமர் நன்னெறி" என்பது பற்றியும், ஸ்ரீமான் கருப்பையா பிள்ளை அவர்கள் "வாசகசாலையின் பயன்" என்பது பற்றியும் பேசினர்கள். அக்கிராசனர் முடிவுரையில் கல்வியைப்பற்றி விஸ்தரித்துப்பேசினர். முடிவில் ஸ்ரீமான் அ. பெ. இரத்தினவேல் நாடார் அவர்கள் அக்கிராசனருக்கும் உபந்நியாசகர்களுக்கும் வந்தனோபசாரம் சொல்லி புஷ்பஹாரம் சூட்டியதும் கூட்டம் இனிதகலையப்பெற்றதென காரியதரிசி எழுதுகிறார்.

ஃ ஃ

#### மீண்டும் மகாதேவய்யர்.

ஸ்ரீமான் ஸ்ரீநிவாசய்யங்கார் பிரசார நிமித்தம் திண்டுக்கல்லுக்குப் போயிருந்த பொழுது, சேரமாதேவிக் குருகுலத்தின் நாசத்திற்குக் காரணமாயிருந்த திரு. மகாதேவய்யர் அவரிடம் ஓர் விண்ணப்பம் சமர்ப்பித்தனராம். அதில் குருகுலம்செய்து வரும் வேலையை அவர் நேரில் வந்து பார்க்க வேண்டுமென்றும் அதற்குப்பொருள் உதவ வேண்டுமென்றும் குறிப்பிட்டிருந்தாராம்.

ஃ ஃ

#### சுயராஜ்யா ஆபீசில் வேலை நிறுத்தம்.

சென்னை சுயராஜ்யா அச்சுக்கூடத்தில் தமிழ் கம்பாஸிட்டர்கள், தங்கள் சம்பளம் குறைவாய் இருக்கிறதென்றும், உயர்த்த வேண்டுமென்றும் செய்து கொண்ட விண்ணப்பம் கவனிக்கப்படாததால் வேலை நிறுத்தம் செய்திருக்கின்றனர். திங்கட்கிழமை முதல் தமிழ் சுயராஜ்யப் பத்திரிகை வெளிவரவில்லையென்று தெரிகிறது.

ஃ ஃ

#### விருதுபட்டி.

கோலை:- அருப்புக்கோட்டை ரஸ்தாவில் சென்ற ஞாயிறன்று பிற்பகல் இரண்டரை மணிக்கு ஒரு பிரேதம் தலையில்லாமல் கிடந்தது. தலை அகப்படவில்லை. இது விஷயமாகப் போலீசார் விசாரித்து வருகின்றனர்.

நற்கோலை:—இவ்வூருக்கு மூன்று மைல் தூரத்திலுள்ள வடமலைக்குறிச்சிக் கிராமத்தில் ரெட்டி வகுப்பைச் சேர்ந்த பதினைந்து வயதுள்ள ஓர்பெண் தன் தமக்கையின் புருஷனிடம் பேசிக் கொண்டிருந்ததற்காக அப் பெண்ணின் கணவன் அடித்துத் துன்புறுத்தினனும். அதனைப் பொறுக்க முடியாது சென்ற வெள்ளியன்று தூக்கிட்டுக்கொண்டு இறந்துபோனள். விருதுநகர் ஆஸ்பத்திரிக்குப் பிரேதம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. பெண்ணின் கணவனும், தமக்கையின் கணவனும், பந்துக்களில் இரண்டொருவரும் கைது செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## தமிழகம்.

மகாத்மா காந்தி குற்றாலத்திற்குப் போவாரென்று சொல்லப்படுகிறது.

ஃ ஃ

மாவலி கம்பெனி தொழிலாளரது வேலை நிறுத்தம் இன்னும் முடியவில்லை.

ஃ ஃ

சென்னையிலுள்ள மிருகக் காட்சிசாலையில் இரண்டு சிங்கக்குட்டிகள் பிறந்திருக்கின்றனவாம்.

ஃ ஃ

ஜூலை மீ கஉ-யன்று பெங்களூரில் ஒரு கண்காட்சிசாலை திறந்து வைக்கப்படும். அதனை மகாத்மாகாந்தி திறந்து வைப்பார்.

ஃ ஃ

திருநெல்வேலி ஜில்லா தேசிய மகாநாட்டை விரைவினில் நடத்த முயற்சிகள் திவிரமாகச் செய்யப்படுகின்றனவாம்.

ஃ ஃ

சென்னைக் கார்ப்பரேஷனின் ராயப்பேட்டை டிவிஷனுக்கு, பள்ளத்தூர் ஸ்ரீமான் உ. அ. உ. க. லெட்சுமணஞ் செட்டியார் அபேட்சகராக நிற்கிறார்.

ஃ ஃ

விருதுநகர் டி. ஆர். வாசகசாலைக்கு அருகாமையிலுள்ள ஒரு புகையிலைக்கிடங்கில் சில தினங்கள் முன் தீவிபத்தேற்பட்டு ௪௦௦௦ துலாம் புகையிலை நிக்கிரையாயதாம்.

ஃ ஃ

கோக்கலே ஹாலில் திரு. ஷண்முகம் செட்டியார் பிரசங்கம் நடக்கும்போது ஒருவரது தலைப்பாக்கையும் பணப்பையும் களவு போயிற்றாம்.

ஃ ஃ

ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் முதலியவர்கள் சென்னைக் காங்கிரசிற்குப் பணம் வசூலிப்பதின் பொருட்டு, ஜூன் மீ உகஉ-யன்று செட்டிமார் நாட்டுக்கு வருவார்கள்.

ஃ ஃ

வெள்ளத்தால் சேதமடைந்த சாலைகளை பழுதுபார்ப்பதற்கும் மற்றும் சில வேலைகளுக்குமாக சென்னை அரசாங்கத்தார் திருநெல்வேலி ஜில்லா போர்டு சபையாருக்கு ஆயிரம் ரூபாய் கிராண்டாகக்கொடுத்திருக்கின்றனராம்.

ஃ ஃ

மானாமதுரையில் புதிதாகக் கட்டுப்பட்டிருக்கும் பாலத்தை சென்னை கவர்னர் லார்டுகோஷின் ஜூன் மீ உஅஉ காலை க௦ மணிக்குத் திறந்துவைப்பார். உடனே ஜில்லா போர்டு மெம்பர்களை கவர்னருடன் படமெடுக்கப்படும்.

ஃ ஃ

விருதுநகர் தென் காசி ரயில் பாதையை ஜூன் மீ உகஉ-யன்று சென்னைக்கவர்னர் லார்டு கோஷன் திறந்துவைப்பார். அன்று தினம் விருதுநகரில் புதிதாக ஏற்படவிருக்கும் எலக்டிரிக்ஸ்டோர் ஹௌஸுக்கு அஸ்திவாரக்கல் நாட்டுவார்.

ஃ ஃ

தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தார் சென்னையிலுள்ள உயர்தரப் பாடசாலைகளிலும் கலாசாலைகளிலும் படிக்க அவாவுள்ள ஏழை செங்குந்தப் பிள்ளைகளுக்கு இவ்வருஷமுதல் உபகாரச் சம்பளம் கொடுத்துவரத் தீர்மானித்திருக்கின்றனர்.

ஃ ஃ

திருச்செங்கோட்டில் நடந்த வீரசைவ சங்க மகாநாட்டிற்கு விஜயம் செய்திருந்த லிங்காயுதர்கள் அவ்வூர் காலையில் கோவிலுக்குச் சென்று தாமே தேங்காய் உடைத்தனர். அதைக்கண்ட குருக்கள்கள் அவ்வூரவரையும் வெளியில்பிடித்துத் தள்ளிக் கோவிலைமூடிவிட்டனர். அதனால் ஆயிரம் ஜனங்கள் பகல்பன்னிரண்டு மணிவரைகாத்திருந்தனர். பின்னர் போலீஸ் பந்தோபஸ்துடன் கோவில் திறக்கப்பட்டு லிங்காயுதர் அனைவரும்சுவாமி தெரிசனம்செய்துகொண்டனர்.

ஃ ஃ

ஜூன்மாதம் கஉம் தேதி முதல் மதுரையில் சத்தியாக்கிரகம் நடைபெற்று வருகிறது. கத்திதாங்கி ஊர்வலம் நடைபெறுகின்றது. எவரும் இதுவரை கைதுசெய்யப்படவில்லை. விருத்தாசலம் கே. வி கணபதி அய்யர் கத்திதாங்கிச் செல்லுகிறார். சத்தியாக்கிரக் கமிட்டி யொன்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கத்திகள் தாங்கிச் செல்ல மதுரையில் லைசென்ஸ் தேவையில்லையென ஓர் வக்கீல் கூறுகிறாராம்.

---

## தாயகம்.

வங்காள நாஷனல்பாங்கியைத்திருத்தியமைப்பதற்குமுயற்சிகள்நடைபெறுகின்றன.

ஃ ஃ

கல்கத்தா யுவதி சரணாலயக் காரியதரிசி அச்சரணாலயத்திலுள்ள ஸ்திரீகளின் கற்பையழிக்க முயற்சித்ததாகக் குற்றஞ் சாட்டப் பட்டிருக்கிறார்.

ஃ ஃ

ஜூன் மீ கஉ வெளிவந்த லாகூர் "குரு சண்டாளன்" என்னும் வாரப்பத்திரிகையை பஞ்சாப் சர்க்கார் பறிமுதல் செய்திருக்கிறார்கள்.

ஃ ஃ

இந்தியாச் சட்டசபையின் அடுத்த கூட்டத்தில், சொத்துமாறுதல் சட்டம் என்ற ஒரு சட்டம் ஆலோசனைக்குக்கொண்டு வரப்படுமென்று அறிவிக்கப்படுகிறது.

ஃ ஃ

இந்துலாவைச் சீர்திருத்தும் பொருட்டு ஒரு ஆராய்ச்சிக்கழகம் புனாவில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இக்கழகத்தார் ஓர் திட்டம் தயாரித்துப் பலரது அபிப்பிராயத்திற்கு அனுப்பி யிருக்கின்றனராம்.

ஃ ஃ

கல்கத்தா சர்வ கலாசாலையில் ரஸாயன சாஸ்திர ஆசிரியரான டாக்டர் பி. வி. மித்தரும் அவரது சகாக்களும் ரஸாயன சாஸ்திரத்தில் புதிய விஷய மொன்றைக் கண்டு பிடித்திருக்கின்றனராம்.

ஃ ஃ

பட்டுவாக்காலில் வகுப்புணர்ச்சி பலப்பட்டு வருவதால் இரவு ஒன்பது மணிக்கு மேல் ஒருவரும் வெளியில் செல்லக்கூடாதென்று கவர்ன்மெண்டார் தடை உத்தரவிட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

புது டில்லியில் புதிதாகக் கட்டிய இந்தியா சட்டசபைக் கட்டிடத்தின் கூரை பழுதாய்ப் போய்விட்டதாம். ஆனால் விஷயம் பகிரங்கமாக எங்கும் தெரிவிக்கப் படவில்லை. பழுதாகியுள்ள இடத்தைப் படமெடுக்கவும் அனுமதிக்கப் படவில்லை.

ஃ ஃ

கல்கத்தாவைச் சேர்ந்த எஸ்பிள்னேட் மூரிங் எனுமிடத்தில் நிற்கும் 'டிரெங்கன்னு' என்னும் கப்பலில் ஒரு கைத்துப்பாக்கியும், ௪௦௦ குண்டுகளும் ஒளித்து வைக்கப்பட்டிருந்ததைச் சுங்க அதிகாரிகள் கண்டுபிடித்தனர். எவரும் கைது செய்யப்படவில்லை.

ஃ ஃ

வைதீக தர்ம இயக்கத்தை நடத்தும் பலரது வேண்டுகோளுக்கு இணங்கி பம்பாய் எம். ஆர். ஜம்புநாதன் ஆவணி மாதம் முதல் தமிழ் வாரப்பத்திரிகையொன்று நடத்த உத்தேசித்திருப்பதாகவும், இந்துமதச் சீர்திருத்தமும் தீண்டாதவர்களுக்குழைத்தலும் இப்பத்திரிகையின் நோக்கமாக விருக்குமென்றும் கூறப்படுகிறது.

ஃ ஃ

சுவாமி சிரத்தானந்தரைக் கொலை செய்வதற்கு ஓர் சதியாலோசனைக் கூட்டம் இருந்திருக்க வேண்டுமென்றும், அக்கூட்டத்தார் இன்னும் பல தலைவர்கட்கு பயமுறுத்தல் கடிதம் வரைவதாகவும், எனவே அக்கூட்டத்தைக் கண்டுபிடிக்க முயற்சிக்க வேண்டுமென்றும் ராஜப்பிரதிநிதிக்கு ஆமதாபாத்திலுள்ள பல பிரமுகர்கள் கைச்சாத்திட்டு ஒரு மகஜர் அனுப்ப முயற்சி நடைபெறுகிறது.

ஃ ஃ

ஆஜ்மீரைச்சேர்ந்த பிசலா நிவாஸ் எனுமிடத்தில் சில தினங்கள் முன் சில சாதுக்கள் துளஸி மடத்திற்கு விவாகம் நடத்தி பூஜைகள் செய்து கொண்டிருக்கையில் போலீஸார் வந்து வெள்ளித்தடி முதலிய ஆடம்பரம் வைத்துக்கொள்ளக் கூடாதென்று தடுத்ததை அவர்கள் பொருட்படுத்தாமலிருக்கவே சப் இன்ஸ்பெக்டர் வந்து சாதுக்களை அடித்ததாகவும் பூஜை சாமான்களைக் காலாலுதைத்ததாகவும் பின்னர் பெருங்கலகமேற்பட்டதன்மேல் போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்யவே எ பேர்களுக்குக்காயமாம். ரூ. ௪௦௦௦ பெறுமான முள்ள சாதுக்களின் சாமான்கள் உடைக்கப்பட்டனவாம்.

அடுத்த சிவில் சர்விஸ் போட்டிப் பரீட்சை கக௨அ௵ ஜனவரி மீ சவடில்லியில் நடைபெறும்.

ஃ ஃ

தேசபந்து திருநாள் இந்தியாவிலுள்ள முக்கிய நகரங்களிலெல்லாம் கசு-௬-உஎ அன்று கொண்டாடப்பட்டது.

ஃ ஃ

திருவாங்கூரைச் சேர்ந்த கொடுங்கல்லூரி னண்டையில் ஒரு பெரிய கொம்புள்ள மீன் பிடித்திருக்கின்றனராம். நீளம் கூ அடியாம்.

ஃ ஃ

அரசாங்கத்தார் பருத்தி நெசவுத் தொழிலுக்கு ஆதரவு அளிக்க மறுத்துவிட்டதால் பம்பாயிலுள்ள பல ஆலைகள் மூடப்படுமெனத் தெரிகிறது.

ஃ ஃ

கல்கத்தாவிலுள்ள பல ஐரோப்பியக் கம்பெனிகளை ஏமாற்றியதாக டேக்லிஸ் டெவ்ரில் என்ற ஐரோப்பியர் ஒருவர் குற்றஞ்சாட்டப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ

அடுத்த ராஜாங்க சபைக்கூட்டத்தில் ராஜீயச் சிறையாளர்கள்விடுதலைவிஷயமாக ஸ்ரீமான் ராய் சௌத்ரி ஒரு தீர்மானம் கொண்டுவருவார் என்று அறிவிக்கப்படுகிறது.

ஃ ஃ

இந்திய சர்க்காரின் ஹோம் மெம்பராயிருந்த ஸர். அலெக்சாண்டர் முட்டிமனின் பதவிக்கு உள்நாட்டு இலாகாவில் காரியதரிசியாயிருந்த ஸ்ரீமான். ஜேம்ஸ் கிரோரார் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ

இந்து ஹைதராபாத்தைச் சேர்ந்த கசு வயதுப்பெண் சில தினங்கள் முன் மாமியின் கொடுமை பொறுக்கமுடியாது உடையில் மண்ணெண்ணெய் ஊற்றித்தீ வைத்துக்கொண்டு இறந்தாள்.

ஃ ஃ

டக்கா ஜில்லா காங்கிரஸ் உதவி காரியதரிசியும் 'பார்வார்டு' பத்திரிகை ஏஜண்டுமான ஸ்ரீ சுரேந்திர குமார்தாஸ் என்பவர் நாராயண கஞ்ச் டிவிஷனில் ஒரு கொள்ளை சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ

அகில இந்தியக்காங்கிரஸ் கமிட்டி, இந்து முஸ்லிம்பிரிவினை விஷயமாகச் செய்துள்ள தீர்மானத்தை அமுலுக்குக்கொண்டுவருவதற்காகவேண்டிய பிரசாரம் செய்வதற்காக, இந்து முகமதியரல்லாதாரும், காங்கிரஸ் காரர்களும் சேர்ந்து இந்து தேசிய சங்க மொன்றை ஸ்தாபித்திருக்கின்றனர்.

ஃ ஃ

பர்மாவைச்சேர்ந்த டங்கூன் எனுமிடத்திலுள்ள சிறைச் சாலையிலிருந்து கைதிகளும் வார்டர்களும் மர்குரிடத்திற்குக் கல் உடைக்கச் சென்றபொழுது ஜமேதாருக்கும் கைதி வார்டர் ஒருவருக்கும் சச்சரவு ஏற்பட்டுக்கைதிகளும் மற்ற வார்டர்களும் சேர்ந்து அந்த ஜமேதாரைஅடித்துக்கொன்றுவிட்டனராம்.

ஃ ஃ

இந்தியாச் சட்டசபையின் அடுத்த கூட்டத்தில் ஜனப்அப்துல் லத்தீப்சாயபு "மாப்பிள்ளைக் கைதிகளைக்கொண்டு அந்தமானைக்குடியேற்ற நாடாகச்செய்யும் திட்டத்தை நிறுத்திவிட்டு, மாப்பிள்ளைக் கைதிகளை இந்தியாவிலுள்ள சிறைகளில் கொண்டு வந்து வைப்பதோடு அவர்களது குடும்பங்களை மலையாளத்திற்கு அனுப்பிவிட வேண்டுமென்று சபையோடு கூடிய கவர்னர் ஜெனரலை இச்சபை கேட்டுக்கொள்ளுகிறது" என்ற தீர்மானத்தையும், திரு. எஸ். ஸ்ரீனிவாஸய்யங்காரும் மற்றும் கடு பேரும் "கிலாபத் கிளர்ச்சியின் போது அதிக ஊக்கஞ்செலுத்தி வந்த கர்னாடக நவாப் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குக் கொடுத்துவந்த உபகாரநிதியைச் சர்க்கார் நிறுத்திவிட்டபடியால் மீண்டும் முன்போல் கொடுக்கவேண்டுமென இச்சபை கவர்னர் ஜெனராலுக்குச் சிபார்சு செய்கிறது" என்ற தீர்மானத்தையும் கொண்டுவரப்போவதாக அறிவித்திருக்கின்றனர்.

---

## அயலகம்.

வரப்போகும் ராயல் கமிஷனுக்கு பழைய ராஜப்பிரதிநிதியான லார்டு ரீடிங் தலைவராக வரலாமென்று சொல்லப்படுகிறது.

ஃ ஃ

ஹாஸ்யப் புத்தகங்கள் எழுதுவதில் பெயர்பெற்ற கே. ஜேரோம் என்னும் ஐரோப்பியர் சில தினங்கள் முன் இறந்துவிட்டார்.

ஃ ஃ

பாக்தாத் நாவின் பிரேதவடக்கத்தின் போது ஐம்பதினாயிரம் ஜனங்கள் வந்து துக்கக் கொண்டாட்டத்தில் கலந்துகொண்டனராம்.

ஃ ஃ

சுரங்கங்களில் பந்தோபஸ்தை உறுதி செய்வதற்கு வழிதேடுவதற்கான ஆராய்ச்சி ஸ்தாபனம் ஒன்று பாக்ஸ்டன் எனுமிடத்தில் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

ஃ ஃ

ஸ்பெயின் அரசர் குமாரத்தி ஸ்ரீமதி இன்பெண்டா பியாட்ரிஸ் எல்டரை, வேல்ஸ் இளவரசர் கல்யாணம் செய்துகொள்ள நிச்சயித்திருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது.

ஃ ஃ

லண்டனிலுள்ள புதிய இந்தியா மாளிகைச் செலவுக்கு இந்தியா அரசாங்கத்தார் பணம் கொடுப்பார்களென்று பார்லிமெண்டில் ஒரு கேள்விக்கு விடை இறுக்கப்பட்டது.

ஃ ஃ

இங்கிலாந்து தேசத்தில் முப்பத்து மூவாயிரம் க்ஷவரக்கடைகள் இருக்கின்றனவாம். பெண்கள் தலைமயிரை வெட்டிக்கொள்ளத் தொடங்கி விட்டதால் அங்கே அம்பட்டர்கட்கு வேலை அதிகமாய் விட்டதாம்.

ஃ ஃ

துருக்கியப் பெண்களின் சீர்திருத்த வாழ்க்கை சம்பந்தமான விஷயங்களை அறிவிக்கும் பொருட்டு முஸ்லிம் நாடுகளுக்கு துருக்கிய மாதர்களின் தூதுவக்கூட்டமொன்று பிரயாணப்படப் போகின்றது.

ஃ ஃ

சீனாவின் துறைமுகப்பட்டினமான காண்டனில் இருபது லெட்சம் ஜனங்கள் வசிக்கிறார்களாம். நகரில் இடமில்லாததால் நகரினைச்சார்ந்து ஓடும் நதியில் பாலமிடப்பட்டு பத்து லெட்சம் ஜனங்கள் அதில் வசிக்கிறார்களாம்.

ஃ ஃ

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் கணித சாஸ்திரத்தில் முதன்மையாகத் தேறியவர்களுள் இந்தியாவைச் சேர்ந்த ஆர். ஏ. கோபாலஸ்வாமி, டி. வி. பவேஷ், ஆ. பீகாரி, எச். ஐ. கோர்ச்சி, பி. கே. கோஷ் முதலியவர்களும் சேர்ந்திருக்கின்றனராம்.

ஃ ஃ

உலகத்திற்குள்ளேயே பெரிதான காங்கிரட்டுக் கட்டிடமும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் காட்சியில் முக்கியமானதும், வேம்பிங் இஞ்சினீரிங் அரண்மனையுமான கட்டிடம், காட்சிமைதானத்தின் ஒரு பாகத்துடன் பிரிட்டிஷ் சினிமாப்பட உற்பத்திக் கம்பெனிக்கு கசஎ௫௦௦-பவுனுக்கு விற்கப்பட்டு விட்டது.

---





...ச் சிறுமைப் படுத்தல்.

... கார்டியனில் பின் வரும் ... படுகின்றது:—

பிரபல மனோதத்துவ நிபுணரான டாக்டர் டபிள்யூ. ஏ. பாட்ஸ் என்பார் லெஸ்டர் எனுமிடத்தில் நடைபெற்ற பெற்றோர்களின் மகாநாட்டில் கூறியதாவது:— ...ல பெற்றோர்கள் தம் குழந்தைகளை ...யால் சிறுமைப்படுத்து... கடமையாக் கொண்டிருக்கின்றன... அவன் எவ்வளவு திறமையற்ற புத்தியற்றன் ... ங்கள் எவ்வளவு ... ள் என்பதையும் ... அவர்களுக்கு ஒரு நிமிடமேனும் மனச் சமாதானம் கிடைப்பதில்லை. இம்முறையில், குழந்தை தான் உண்மையிலேயே திறமையற்றவன் என்று கருதத் துவக்குகிறான். அவனது வருங்கால வாழ்விற்கு ஒருபெரும் ...னியனாக முடிகிறது. குழந்தைகள் பல ...மனோவியாகூலங்களுக்கும், அவற்றின் விளைவானஉடல் நோய்களுக்கு உள்ளாவதற்கும்பெற்றோர்களின் இத் தகையமுறையே காரணம்எப்போதும்குழந்தைகளை அவர்கள் வழியே விட்டுத்தப்புந் தவறுமாகக்காரியம் செய்தாலும் பிறர் உதவியின்றித்தாங்களே செய்யஇடங்கொடுத்தல் மிகவும் அவசியமாகும். "தங்களுக்குத் திறமையில்லை" "தங்களால் ஒன்றும்முடியாது" என்று எண்ணத் துவங்கும் குழந்தைகள்நன்குவளர்ச்சியுறுவதில்லை. அவர்களுக்குவாழ்க்கைமிகவும்கஷ்டமான தொன்றாய்க் காணப்படும். வாழ்க்கையின் எந்தத்துறையிலும் அவர்கள்தோல்வியேயுறுவார்கள்.ஓயாதுகுழந்தைகளிடம்குற்றங் கண்டுபிடிப்பதும் வைவதும் மிகவும் தீமை பயப்பனவாம்.

நவசக்தி.

---

### வகுப்புப் பூசல்கள்.

பண்டிதர் மதன்மோஹன மாளவியா மைசூரில் நிகழ்த்திய சொற்பெருக்கொன்றில் குறிப்பிட்டதாவது:—

மைசூரிலும் பிராமணர் பிராமணரல்லாதார் வேற்றுமை காணப்படுவதாக அறிந்து பெரிதும் வருந்துகிறேன். கடவுளது அருளுக்குயாவரும் பாத்திரமானவர்களே. தேசீய ஆஸ்தியில் பிராமணரும் சம்பந்தப்பட்டவர்கள் என்பதை ஒவ்வொருவரும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். பிராமணரல்லாதாரும் தேசிய ஆஸ்தியில் சம்பந்தப்பட்டவர்கள் என்பதையும், கல்வியிலும் முன்னேற்றத்துறைகளிலும் அவர்களுக்கு எல்லா வசதிகளும் அளிக்கப்பட வேண்டுமென்பதையும் அவர்கள் நினைவிலிறுத்திக்கொள்ள வேண்டும். ஸர். ஜே. ஸி. போஸ் அவர்கள் பிராமணரல்ல. வெளிநாடுகளில் அவர் நிகழ்த்திய சொற்பெருக்குகளைக் கேட்டு மகிழாத இந்துவாவது மகமதியராவது உண்டா? இந்தியாவின் ஆன்மஞான வளர்ச்சிக்கும் அறிவு வளர்ச்சிக்கும் பெரிதும் பாடுபட்டு இந்தியாவிற்குப் பேரும் புகழும் அளித்த பிராமணரல்லாதார் பலர் உண்டு. பிராமணர்களது மகத்துவத்தைப்பற்றியும் பிராமணரல்லாதார் தவறான அபிப்பிராயங்கொள்ளலாகாது. எல்லோரைப்பற்றியும் எல்லோரும் பெருமைகொள்ள வேண்டும். ஸ்ரீ ராமர் ஸ்ரீ கிருஷ்ணர், புத்தர், முதலியோர் பிராமணரல்ல, எனினும் பிராமணர்கள் அவர்களது விக்கிரஹங்களின் முன் கும்பிட்டு வணங்கவில்லையா? வாயார அவர்களைத் துதிக்கவில்லையா? எவரெவரிடம் நற்குணங்கள் காணப்படுகின்றனவோ அவர்களெல்லாம் கௌரவிக்கப்படவேண்டும்.

---

### சீர்திருத்தம் அவசியம்.

ஸ்வாமி சத்திய தேவர் "இந்தியன்நேஷனல் ஹெரால்டு" எனும் பத்திரிகையின் பிரதிநிதியினிடம் இந்து சங்காத்தன் இயக்கத்தைப்பற்றிக் கூறுகையில் குறிப்பிட்டதாவது:—

## எதிரொலி.

இந்து சமூகத்தின் மனப்போக்குமுற்றும் மாறுதலடைய வேண்டும். தீண்டாமை எனும் பேயை அறவே ஒழித்து விடவேண்டும். சாதிக்கொடுமைகளெல்லாம் அகற்றப்படவேண்டும். தேசத்தில் புதிய சக்தி கொ... தோற்று... சமபந்தி ... மணம் ...செய்து ...முதலியன நடைபெற வேண்டும். இந்துக்கள் நல்ல பலசாலிகளாக விருப்பார்களாயின் இந்து முஸ்லிம் பிரச்னை தானே தீர்ந்து விடும். சங்காத்தன் இயக்கம், தன்னம்பிக்கை இயக்கமேயன்றி வேறல்ல. முஸ்லீம்களுக்கு விரோதமான இயக்கமல்ல. இந்து சமூகத்தைச் சீர்திருத்தும் இயக்கமே சங்காதன் இயக்கமாகும்.

---

### பத்திரிகை மீது பாணம்.

"பார்வர்டு" பத்திரிகை பர்மாவில் வரவொட்டாமல் பர்மா அரசாங்கத்தார் தடுத்திருப்பதைக் கண்டிக்கச் சமீபத்தில் கல்கத்தாவில் நடந்ததொரு பொதுக்கூட்டத்தில் பாபு விபின் சந்திர பாலர் கூறியதாவது:—

சில்லரை உபத்திரவங்களைச் செய்வது ராஜ தந்திரமாகாது. தம்மை இந்திய ராஜப்பிரதிநிதியாக நியமிக்கு முன் இந்திய அரசாங்கத்தார் இம்முறையையே அனுஷ்டித்து வந்ததாக ஹார்டிஞ்சு பிரபு கூறியிருக்கிறார். 'பார் வர்டு' பத்திரிகையின் இரங்கூன் நிருபர் ஆதாரமற்ற கூற்றுக்களை வெளியிட்டிருந்தால் அவர் மீதும் அப்பத்திரிகை மீதும் அரசாங்கத்தார் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கலாம். தற்பொழுது அமுலிலிருந்து வரும் சட்டம் எதையும் குற்றமாகச் செய்யக்கூடிய சர்வ வியாபியாக விருக்கிறது. ஆனால் பர்மா அரசாங்கத்தார் அவ்விதம் செய்யாமல் தபாலாபீஸ் சட்டத்தின்படி நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கின்றனர். இது கண்ணியமான வழியல்ல. இவ்வற்பத்தனமான நடவடிக்கையானது பர்மா அரசாங்கத்தையே பெரிதும் பாதிக்கும்.

---

### நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள்.

திரு. டி. எஸ். நடேசன் என்பார் 'மலாய்நாட்டு இந்தியர்' எனும் தலைப்பெயரோடு 'தமிழ் நாடு' பத்திரிகையில் வியாசங்கள் எழுதி வருகின்றார். அத்தகைய வியாச மொன்றில் நம் தனவணிகரைப் பற்றி எழுதியிருப்பது வருமாறு:—

தென்னிந்தியாவில் இவ்வகுப்பார் ஒரு பெருத்த ரொக்க வியாபாரிகள் என்று யாவரும் அறிவார்கள்.

இவர்கள் மலேயா நாடு சென்று எப்படிப்பட்ட வியாபாரம் செய்கிறார்களென்றும், தங்கள் செல்வத்தை எவ்விதம் விருத்தி செய்கிறார்களென்றும் பலர் அறியமாட்டார்கள். முன்னொரு விடத்தில் நான் மலேயா நாட்டில் தற்சமயம் நடமாட்டமாயிருப்பவர்கள் ஐரோப்பியர்கள், இந்துக்கள், முகம்மதியர்கள், மலாய்க்காரர்கள், சீனர்கள் ஆகிய இவர்களேயாகுமென்பதாக சொல்லியிருக்கிறேன். ஐரோப்பியர்கள், சங்கியையில் குறைவானவர்கள். சிலர் விசேஷமாய் ரப்பர் தோட்டக்காரர்களாகவும் சிலர் கப்பல் ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்தில் ஈடுபட்டவர்களாகவும் மற்றும் சிலர் லேவாதேவி செய்யும் பாங்கிகளில் உத்தியோக முள்ளவர்களுமாவார்கள். ஆகவே இவர்களுக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களுக்கும் சம்பந்தம் அவ்வளவாக இல்லை. அடுத்தபடியாக இந்தியர்கள் சிலர்களுள் பெரும்பாலர் கூலிவேலை செய்து அன்று அன்று கிடைக்கும் சொற்பத் தொகையைக் கொண்டு வயிறு வளர்க்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் பணம் வாங்கவாவது, அல்லது கொடுக்கவாவது செய்யமாட்டார்கள். இவர்களில் மற்றும் சிலர் உத்தியோக முறையிலிருப்பவர்கள். இவர்களும் கடன் வாங்க வேண்டியவர்களில்லை. அடுத்தபடியாக முகம்மதியர்கள். இவ்வகுப்பினர் வசம் வியாபாரங்கள் விசேஷமாய் இருந்துவருகின்றன. இந்தியாவிலிருந்து போகும் எல்லா சாமான்களும், ஜவுளிகளும் இவர்கள் மூலமே அத்தேசத்தில் இறக்குமதியாகி வியாபாரமாய் வருகின்றன. இவர்களுள் சிலரே செட்டிப்பிள்ளைகளோடு லேவாதேவி செய்கிறார்களேயன்றிப் பலர் செய்வதாய் தெரியவில்லை. மேலும் கொரான்படி வட்டிக்கு அவர்கள் தங்கள் சேர்க்கைச் செல்வத்தை வெளியிடலாகாதென்ற நிபந்தனை யிருக்கிறதால் அவர்கள் ஒருவருக்கொருவர் இலவச உதவி செய்துகொள்ளுகிறதாயும் தெரிவிக்கப்பட்டது. அடுத்தபடி மலாய்க்காரர்கள். இவர்கள் நூதன மாதிரியான மனப்பான்மையுள்ளவர்கள். இவர்களுக்குத் தேவையும் கொஞ்சம். இதரர்களைப்போல் பலவித வியாபாரத்திலும் சம்பந்தப்பட்டு, விசேஷ திரவியத்தைச் சம்பாதிக்கவேண்டியதென்ற தாகம் இருப்பதாகவேதெரியவில்லை. இவர்கள் தாங்கள் இருக்கிறவிடத்திலேயே சம்பாதிக்கத்தக்கவைகளைச் சம்பாதித்து அவைகளைக் கொண்டு காலங்கழிக்கிற சுபாவமுள்ளவர்கள். இப்போதுதான்பார்ப்போரைப்பார்த்து கொஞ்சம் கொஞ்சம் மாறுபட்டுவருகிறார்கள். இவர்களும் செட்டிப் பிள்ளைகளிடம் விசேஷ லேவாதேவி செய்கிறதில்லை. கடைசியாகச் சீனர்கள். இவர்கள் சார்பாகத்தான் நான் சற்றுவிரிவாய் எழுதவேண்டியதாயிருக்கிறது. ஆதியில் இவர்கள் மலாய்தேசம் வரும்போது பரம ஏழைகள். ஆனால் விசேஷ ஊக்கம் பொருந்தியவர்கள். படிப்படியாய்செல்வவானாய்வந்தார்கள் ஆதிமுதல் செட்டிமார்களிடம் தொகைகள் கடன் வாங்கிக்கொண்டு வியாபாரத்திலோ, கண்டிராக்டிலோ, தோட்டங்களிலோ உபயோகப்படுத்தித்தாங்களும்லாபம் சம்பாதித்துக்கொண்டு செட்டிப் பிள்ளைகளுக்கும் சேரவேண்டிய தொகையை நாணயப்படி செலுத்தியவர்களாம். அவர்களுடைய தற்கால செல்வநிலைமைக்குத் தென்னாட்டுசெட்டிப்பிள்ளைகளே காரணமென்று எனக்கு நேரில் அநேக சீனர்களால் தெரிவிக்கப்பட்டது. நாணயம் என்றதை இவர்கள் ஆபரணமாய்க் கொண்டவர்கள்! பணம் சம்பாதிப்பதில் சோம்பலே இல்லாதவர்கள். இன்றைக்கும் நாளைக்கும் சீனர்கள் எவ்வளவு செல்வவானாயிருந்தாலும், புதிதாய் வியாபாரம் தொடங்குவதானாலும், சுரங்க நிலங்கள் சாசனம் செய்துகொள்வதானாலும், ரப்பர் தோட்டங்கள் வாங்குவதானாலும் முதல் முதல் செட்டிமார்களிடம் சென்றுசொற்பத்தொகையையாவது கடன் வாங்கிக்கொண்டுவந்து அத்துடன் பாக்கியைத் தங்களிடமிருந்து சேர்த்தே உபயோகிக்கிறார்கள். அவர்களிடம்வாங்கினால்தான் விருத்தியுண்டு, இல்லையானால் க்ஷீணம்என்ற நம்பிக்கையுள்ளவர்கள். சீனர்களிடம் லேவாதேவி இல்லையென்றால் செட்டிப்பிள்ளைகள் தங்கள் தங்கள் மூட்டைகளைக் கட்டிக் கொண்டு வந்துவிட வேண்டியதுதான். பொது விஷயங்களில் செட்டிப்பிள்ளை தங்கள் கட்சித் தீர்மானத்தை முழுமையும் கௌரவப்படுத்தக் கட்டுப்பட்டவர்கள். பொதுத்தீர்மானங்களைஇவ்வகுப்பார்கௌரவப்படுத்துவதுபோல வேறு எந்த வகுப்பினரும் செய்வதை இனி நான் தெரிந்து கொள்ளவேண்டியவனாயிருக்கிறேன். இந்தியாவின் பரம புருஷர் ஒருவர் ஒருசமயம் காங்கிரஸ் மகாசபைத் தீர்மானங்கள் அதன் அங்கத்தினர்மீது கடமையாகுமே யன்றி, கட்டளையாகமாட்டாதென்றுபகிரங்கமாய் தெரிவித்திருக்கிறார். அகில இந்தியாவுக்கும் ஒரு மாணிக்கம்போல் பிரகாசித்து நடந்துவரும் காங்கிரஸ் மகாசபையின் தீர்மானம், இவ்வளவு சுலபமாய் அர்த்தம் செய்யப்படும் இச்சமயத்தில், செட்டிப்பிள்ளைகள் தங்கள் பொதுக்கூட்டத்தில் முடிவுசெய்யப்படும்தீர்மானத்தைக் கட்டளையாகக்கொண்டாடுவதென்றால் அதனை எடுத்து உரையாமல் முடியாது. செட்டிப்பிள்ளைகளுள் இன்னுமொரு நல்ல வழக்கமுண்டு. சிவதரிசனம் அன்னியில் ஆகாரம் எடுத்துக் கொள்ளமாட்டார்கள். இதை நிதர்சனமாய் தென்னிந்தியாவில் யாவரும் காணலாம். சென்றவிடத்திலும் அவர்கள் வழக்கத்தை விடாது ஒரு கோவில் கட்டுவித்து, கிரந்தரமான மூலதனம் அதற்கென்று ஒதுக்கி வைக்காமல் எல்லாப் பொறுப்பையும் அவர்கள் சேர்க்கையாய் ஏற்றுக்கொண்டு நடத்தி வருகிறார்கள். நான் அநேக ஊர் சென்று நேரில் பார்த்தேன். சிங்கப்பூர், மலாக்கா, மூவார், பத்துபாகட், செரம்பான், கோலாலம்பூர், ஈப்போ, தைப்பிங், பினாங் போன்ற முக்கிய விடங்களில் கோவில் விஷயங்களை எவ்வளவோ பெருமையாக நடத்தி வருகிறார்கள். உற்சவாதிகளை கம்பீரமாயும், பலர் பார்த்துதிகைக்கும்படியும் செய்கிறார்கள். இங்கிருந்து கூலிகளாய் சென்று கூலிகளாகவே ஜீவனம் செய்துவரும் பாமரர்கள் இவர்களால் தான் தாங்கள் இந்துக்களென்றும், தாங்கள் முன்னோர்கள் கணபதி என்றவும், சுப்பிரமணியர் என்றவும், விஸ்வநாதர் என்றவும் தெய்வங்களைத் தொழுது வந்தவர்களென்றும் அறிய வல்லவர்களாயிருக்கிறார்கள். சாதாரணமாய் கூலிகள் இடுப்பில் கட்டிக்கொள்ளும் வஸ்திரம் முகம்மதியர்கள் உபயோகிக்கும் கயிலிதான். வெண்மை வஸ்திரம் உபயோகிப்பவர்கள் மிகவும்சொற்பம். அத்துடன் செட்டிப் பிள்ளைகளால் தர்ம கைங்கரியம் செய்யப்படும் தேவாலய மஹோற்சவங்களைப்பற்றி கேட்கவேண்டியதேயில்லை. இவ்வழியில் இவர்கள் செய்யும் வேலை மெச்சத்தக்கது. அற்பபுத்தியுள்ளவர்கள் மாத்திரம் செட்டிப்பிள்ளைகளைக் குறைகூறுவார்கள். தென்னிந்தியாவிலுள்ள நாமெல்லோரும் இவர்களுக்கு நன்றியுள்ளவர்களா யிருக்கவேண்டும். இவர்கள், எக்காலத்திலும் செல்வம் குன்றாது, இவர்களில் இருக்கும் சேர்க்கை விலகாது திடகாத்திர சரீரிகளாய் இருக்க வேண்டியதென்பதே நம் உத்தேசம்.

---

**குமரன் சந்தா விபரம்.**

| | |
|---|---|
| வருடச் சந்தா | ... ௩—0—0 |
| வெளிநாடு வருடச்சந்தா | ௪—0—0 |
| தனிப்பிரதி | ... 0—௧—௬ |

அரியக்குடி.

தென் திருப்பதியாகிய அரியக்குடி திருவேங்கிடமுடையான் சன்னதியில் சென்ற மாதம் ௩௧௨ பகல் ௧௨ மணிக்கு அஷ்டபந்தன கும்பாபிஷேகம் ஷை தேவஸ்தானம் அருதார், அள. ராம. நா. ஸ்ரீநிவாஸன்செட்டியாரும்ஷைஊர்வ.மி.ராம. ராதாகிருஷ்ணன் செட்டியாரும் சுமார் ரூ ௪000-வரை செலவு செய்து நடத்தி வைத்தார்கள். சென்ற வாரம் வெளிவந்த குமரனில் ரூ ௨௫00 செலவானதும் அதில் ரூ ௨000 அர்ச்சகர்களுக்கு கொடுக்கப்பட்டதென்றும் காணப்படுகிறது. அப்படியல்ல. அர்ச்சகர்களுக்கும் யாகசாலைக்கும் ரூ ௨௫00-ம் இதரவகையில் ரூ ௧௫00ம் செலவுசெய்யப்பட்டிருக்கிறது. அன்று இரவு ஸ்வாமிகள் புறப்பாடும் விமர்சையாய் நடைபெற்றது என ஒரு அன்பர் எழுதுகிறார்.

ஃ ஃ

தேவகோட்டை.

வேலைநிறுத்தம்:-இவ்வூர் யூனியனில் அகாரணமாக தெருப்பெருக்கும் குறவன் ஒருவனை வேலையை விட்டு விலக்கியதன் காரணமாக தெருப்பெருக்குகிறவர்களான குறவர்கள் அனைவரும் சென்ற ஒரு வார காலமாக வேலை நிறுத்தம் செய்துவிட்டனர். இதன் காரணமாக வீதிகளில் ஏராளமான குப்பைகள் தேங்கிக்கிடப்பதோடு இந்த மாதம் அதிகக்காற்றானபடியால் எச்சில் இலைகள் ஒவ்வொரு வீடுகளிலும் ஜனங்கள் பேரிலும் பறந்து செல்கின்றன. சாக்கடைத் தொட்டிகளில் தண்ணீர் தேங்கியிருக்கிறதை அப்புறப்படுத்தாமையால் நாற்றம் சகிக்கக்கூடவில்லை. சேர்மன் ஊருக்குப் போயிருந்தவர் வந்து இரண்டு நாட்களாகியும் இது விஷயத்தில் யாதொரு ஏற்பாடும் செய்யாதிருப்பது வருந்தத்தக்கது. அதிகாரிகளும் கவனித்ததாகவில்லை. என நமது நிருபர் எழுதுகிறார்.

ஃ ஃ

கீழச்சிவற்பட்டி.

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசர் மாணவர் தமிழ்க் கழகம்:—இக்கழகத்தின் சார்பாக பிரபவ வருஷத்திய இரண்டாவது சபை இம்மாதம் ௨-ம் தெய்தி வியாழக் கிழமையன்று பிற்பகல் ௩-௩௰ மணிக்கு ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசர் கலாசாலைத் தலைமையாசிரியர் திரு. ஆ. பூவராகம் பிள்ளையவர்கள் தலைமையின் பாற் கூடிற்று. அப்பொழுது மாணவர்கள் சதாசிவ செட்டியார், கா. அழகப்பன், மா. கிருஷ்ணமூர்த்தி, அரு. சிதம்பரசுவாமி, முதலியவர்கள் முறையே "அறிவு," "அமர்நீதி நாயனார் புராணம்," "குமரகுருபர சுவாமிகள் சரிதம்," "சிவபிரான் நாரைக்கு முத்தியளித்த வரலாறு(திருவிளையாடற் புராணம்)" முதலிய விஷயங்களைச் சொற்பெருக்கிற் பொழிந்தார்கள். கலாசாலை உதவிஉபாத்தியாயர் திரு. து. கிருஷ்ணையங்கார் "ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்," என்பதைப்பற்றிப் பேசினார். பின்னர் அக்கிராசனர் முடிவுரை கூறச் சபை மங்கல வாழ்த்துடன் ௬-௩0 மணிக்கு இனிதாக நிறைவேறியது எனக்காரியதரிசி திரு கா. அழகப்பன் எழுதுகிறார்.

ஃ ஃ

திருவாளர்

ஈ. வே. ராமசாமி நாயக்கரின் விஜயம்.

வைக்கம் வீரரும், சுயமரியாதைத் தீரருமான திரு, ஈ. வே. ராமசாமி நாயக்கர், அவர்கள், ஜூலைமீ ௨-க்கு மேல் ௬0 நாட்கள் தனவணிகர் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வார்கள். தமிழ் நாட்டில் தற்காலம் ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான ராஜ்ய சமூக நிலைமையை முன்னிட்டு, தீவிரமான இயக்கங்களை நிலை பெறச்செய்ய அன்னார் படும்பாடு உலகமறிந்ததே. ஆகையால் அன்பர்கள் அன்னாரை எங்கெங்கே வரவேற்று அன்னாரின் அரிய சொற்பொழிவுகளைக்கேட்க ஆவலுற்றிருக்கின்றனரோ, அவர்கள் கீழ்கண்ட விலாசத்திற்கு எழுதினால், சுற்றுப்பிரயாண அறிக்கை தயாரிக்க அனுகூலமாயிருக்கும். ஜில்லா மகாநாடொன்று அவர் தலைமையில் நடத்த ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இடமும் காலமும், அன்பர்களின் அபிப்பிராயத் தெரிந்து, பின்னர் அறிவிக்கப்படும் என்று திருவாளர்களான, தே. வே. அருணாசலன், ஆவி. லெ. அருணாசலன், கிருத்திவாஸன் ஆகிய மூவரும் கைச்சாத்திட்டு ஒரு துண்டுப்பிரசுரம் வெளியிட்டிருக்கின்றனர்.

குறிப்பு-விலாசம்:-கிருத்திவாஸன், "குமரன் காரியாலயம்," காரைக்குடி.

# கடிதங்கள்.

கோவிற்பட்டி.

(நமது சொந்த நிருபரிடமிருந்து)

இவ்வூர்ப் பக்திவினை கழகத்தின் 22-வது ஆண்டுவிழா நிகழும் ஆனி மாதம் 4ம் தேதி மாலை போர்டு ஹைஸ்கூலில் நடந்தது. ஏராளமான ஜனங்கள் வந்திருந்தனர். திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் எம். ஏ., எம். எல்., தலைமை வகித்து பக்தியைப் பற்றி ஒரு முன்னுரை நிகழ்த்தினார்கள். பின்னர் காரைக்குடி திருவாளர், அரு. சோமசுந்தரன் செட்டியாரவர்கள் "அறிவும் அன்பும்" எனும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு செய்தார்கள். அதன் சாரம் வருமாறு:— அறிவும் அன்பும் மக்களுக்கு இன்றியமையாதன. சமுதாய முன்னேற்றத்திற்கு இவை பெரிதும் வேண்டற்பாலன. உண்மை அறிவும் உண்மை அன்புமே நல்வின்பத்தை விளைவிப்பன. மூட நம்பிக்கையும் மூட பக்தியும் சமுதாயத்தைப் புழுப்போலரித்துத்தின்பன. நம் சமுதாயம் அஞ்ஞானச் சேற்றில் பெரிதும் ஆழ்ந்திருக்கின்றது. அறியாமைக்கு அடிமைப் பட்டிருக்கின்றது. சாதி சமயம் இரண்டிலும் எண்ணித்தொலையாத மூட வழக்கங்கள் குவிந்துவிட்டன. பாமர வழக்கங்கள் அறிவையும் அன்பையும் வளரவொண்ணாது தடுக்கின்றன. சிறு தெய்வ வழிபாடு, சோரூப ஆராதனை, உயிர்ப்பலி, மூடபக்தியால் உடலை ஊறு செய்து கொள்ளுதல், தீமிதித்தல் ஆகிய பல்வேறு வகைப்பட்ட கொடிய வழக்கங்கள் மக்களைப் பாழ்படுத்துகின்றன. மக்கள் மூட நம்பிக்கைகளுக்கு மீளா அடிமைகளாகி அஞ்சி அஞ்சிச் சாகின்றனர். அந்தோ! பரிதாபம்! பார்ப்பன மூட நம்பிக்கைகள் அறிவின் பெயரால் உண்மையின் பெயரால் மக்களை வாட்டுகின்றன. அவை ஆன்மாவையே விலங்கிட்டு வைத்திருக்கின்றன. இத்தகைய மூட நம்பிக்கைகளின் பொருட்டு ஏராளமான பணம் வீண்விரய மாகின்றது. சமுதாய வாழ்வும் மூடக்கட்டுப்பாடுகட்குட்பட்டுப் பெரிதும் சீர்குலைந்து முட்டுப்பாடான நிலையை அடைந்திருக்கின்றது. இந்த மக்கள் முன்னேறுதல் வேண்டுமானால் மூட நம்பிக்கைகளிலிருந்து விடுபடுதல் வேண்டும். உண்மையறிவையும், உண்மை அன்பையும், நாடெங்கும் பரப்புதல் வேண்டும். அறிவு வளர்ச்சிக்கு மாறாக அறிவிற்கு விலங்கிட்டு எல்லை கட்டித் தொல்லைப்படுத்தி ஆராய்ச்சியை வெறுத்தல் கூடாது. உண்மை எப்பொழுதும் நிலைத்து நிற்கக் கூடியதாதலால் ஆராய்ச்சியைக்கண்டு ஒருவரும் அஞ்ச வேண்டுவதில்லை. ஆராய்ச்சியறிவே பாமரத்தன்மையைப் போக்குவது. ஆன்ம சுயராஜ்யத்தை நல்குவது. வருங்காலத்து மக்களாகிய இளைஞர்கள் மூட நம்பிக்கைகளை ஒழித்தற்கும் நல்லறிவைப் பரப்புதற்கும் பெரிதும் பாடுபடல் வேண்டும். பின்னர் திருவாளர் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் "பலியின் கொடுமை" என்பதைப்பற்றிப் பேருணர்ச்சியோடு அரியதோர் விரிவுரை நிகழ்த்தினார்கள். அதன் சாராம்சம் வருமாறு:— உயிர்ப்பலியிடுவது மிகக் கொடிய வழக்கமாகும். சமயத்தின் பெயரால் தெய்வத்தின் பெயரால் எள்ளளவும் இரக்கமின்றிக் கொலை புரிவது பொறுக்கமுடியாத கொடுமையாகும். தமிழ்நாடு முழுவதும் பலியிடும் கொடிய வழக்கம் நடைபெற்று வருகின்றது. பலிக்களத்தின் கோரக்காட்சி கண்ணால் காண முடியாததாகும். ஆயிரக்கணக்கான பிராணிகள் ஏக காலத்தில் உயிர் பிரிந்து செல்லும் கொடிய தோற்றம் சிறு தெய்வ ஆலயங்கள் கொலைக்களமாக விளங்குதலை நிரூபிக்கின்றது. கொலைக்களங்கட்கு செல்லுவதும் கோரரூபங்களை வழிபடுதலும் கூடவே கூடாது. யாகத்தின் பொருட்டும், படைப்பின் பொருட்டும், தேரோட்டத்தின் பொருட்டும் வேறு பல காரணங்களை முன்னிட்டும் உயிர்க்கொலை புரிதலை அடியோடு, நிறுத்தி விடுதல் வேண்டும். ஜீவகாருண்ய இயக்கத்தைச் செழித்தோங்கச் செய்யவேண்டுவது நமது முதற்பெருங் கடமையாகும். ஏராளமாகக் கோயில்களையே கட்டிக்கொண்டு போவதினும் சமயப் பிரசாரத்தில் பணத்தைச் செலவழிப்பது பொருத்தமுடையதாகும். உண்மை அறிவு நூல்களைப்பரப்பி மூட பக்தியை ஒழித்தல் வேண்டும். பின்னர் திருவாளர், ச. பழநிச்சாமி பிள்ளை, அவர்கள் "தமிழ்ச் சமயம்" என்ற தலைப்பில் ஜீவகாருண்யத்தைப்பற்றியும், பிராமண்யத்தை ஒழித்தலைப்பற்றியும் மூடபக்தியை அகற்றுதலைப்பற்றியும் தமிழ் அறிவு நூல்களின் பெருமையைப்பற்றியும் உணர்ச்சியோடு பேசினார்கள். பின்னர் திருச்செந்தூர், திருவாளர், முத்துக்குமாரசாமி பிள்ளை, அவர்கள் "தெய்வ அன்பு" எனும் தலைப்பின் கீழ் பொய்த் தெய்வம் மெய்த்தெய்வமெனப் பிரித்து உண்மை அன்பினை விளக்கி இறைவன் பாலும் உயிர்கள் பாலும் இரக்கங் காட்டுதலை இனிது விரித்துரைத்தார்கள். நான்கு சொற்பொழிவுகளும் வந்திருந்தவர்கள் அனைவரையும் பெரிதும் களிப்புற்று இன்புறுமாறு செய்தன. பின்னர் தலைவரவர்கள் நான்கு சொற்பொழிவுகளையும் தழுவி சிறந்ததோர் விரிவுரையினை நிகழ்த்தினார்கள். அதன் சாராம்சம் வருமாறு:—மெய்யறிவும் மெய்யன்பும் பெரிதும் வேண்டற்பாலன. திருவள்ளுவ தேவர் அறிவிலாரை மாக்களென்றும், அன்பிலாரை மரப்பாவை என்றும் கூறுகின்றார். அறிவு, அன்பு, ஒழுக்கம் ஆகியவைகளைத் தரும். நற் கல்வியே நாட்டிற்கு நன்மை பயப்பது. மூட நம்பிக்கையின் பாற்பட்டு சிறு தெய்வங்கட்கு பலியிட்டு வழிபாடு செய்வது முற்றிலும் விரோதமானதாகும். நம்மிலும் தாழ்ந்த பேய்த்தெய்வத்தை நம்பி நாம் ஏன் பலியிடுதல் வேண்டும்.? அறிவு அச்சத்தால் மூடப்பட்டிருப்பதே மக்கள் பயந்து பலியிடுவதற்குக் காரணம். தெய்வ நம்பிக்கையற்ற பூசாரி பிழைப்பின் பொருட்டு பலியினைச்செய்து ஏமாற்றுகின்றான். இவர்களையே மக்களேபோல்வர் கயவர் என வள்ளுவனார் கூறுகின்றார். நல்லவர் சிலர் அறியாமையால் பலியிடுதலில் ஈடுபடுகின்றனர். அவர்களுக்குப் போதிக்க வேண்டுவது நமது கடன். அச்சத்தையும் ஆபாசத்தையும் மூட நம்பிக்கைகளையும் ஒழிக்க வேண்டுவது நமது முக்கிய வேலையாகும். பேய்வழிப்பாட்டைத் தொலைக்க நாம் பெரிதும் பாடுபடுதல்வேண்டும். கத்தோலிக்க மூட நம்பிக்கைகளை எதிர்த்த வீரனை மார்ட்டின் லூதரைப்போல் துணிவுடன் நாம் அவைகளைப்போக்க முயலுதல் வேண்டும். பரோபகார சிந்தையால் மேல்நாடு வளர்ந்து வருகிறது. தமக்குத் தெரிந்ததைப் பிறருக்குச் சொல்லுவதென்பது அவர்களுடைய நறுங்குணமாக விளங்குகின்றது. அவர்கள் ஒற்றுமையுணர்ச்சியுடன் நன்மைகளை வளர்க்கின்றனர். ஆனால் நம்முடைய நாடோ பெரிதும் பிற்போக்கான நிலைமையில் இருக்கின்றது. சமய உண்மைகள் வளரவில்லை. அறியாமையும் வஞ்சனையும் மெய்ச்சமயத்தை பாழ்படுத்துகின்றன. சமயாச்சாரியர்களுக்குப் பின்னர் திறம்பட நடத்தும் அமைப்புக்களும் இன்மையால் மெய்யுணர்வு மறைந்து வந்திருக்கின்றது. அமைப்பு விசேஷத்தால் போய் மடங்கள் 2000-ஆண்டுகளாக உயிர் பெற்று நிலவுகின்றன. திருவாவடுதுறை மடமோ 500 ஆண்டுகளுக்குள் ஓய்ந்துவிட்டது. மேல் நாட்டில்குடிகள் ஒத்தஉணர்ச்சியுடன் நல்லியக்கங்களை வளர்க்கின்றனர். ஆனால் நண்டோ அவ்விதம்ஏற்பாடு இல்லை. கிறிஸ்தவர் கோயில்களில்மதபோதனை நடைபெறுகின்றது. நம்முடைய ஆலயங்களில் அறிவின் தொடர்பில்லை. நமது கோயில்களில் அறிவூட்டுதல் புத்தக நிலையம் அமைத்தல் பிரசங்கம் புரிதல் ஆகியவைகுறித்து காம்காகமம் முறையிடுகின்றது. விவேகானந்தர் ஆன்ம ஞானத்தை உலகத்திற்கு வழங்குவது இந்தியா என உரைத்துள்ளார். ஆனால் நண்டுள்ள பாமர நிலையைப் பார்த்தாலோ பெரிதும் பரிதாபகரமாக இருக்கின்றது. உயர்ந்த சமயப்படிப்பு அருகியிருக்கின்றது. மெய்ச்சமய உணர்ச்சி பரவவில்லை. பதினாயிரம்பேரில் நூறுபேர் கொள்கையினைத் தெரிந்திருத்தல் அரிது. நடப்பவர் பத்துப்பேர்கூட இரார். மேலும் போதிப்பவர், ஒருவரிருவரே. சுயநல எண்ணமே இவ்வீழ்ச்சிக்குக்காரணம். ௩ கோடிபேரில் ௩0 பேர் நல்லெண்ணமுடையவராகக் கிடைப்பது அரிதே உரிமை யுணர்ச்சி பெருகாதிருப்பதே காரணம் கடவுளில்லை என்போர் தம்மனச்சான்றின்படி நடக்குங்கால் யோக்கியராகின்றார். கடவுள் நம் அவ்வாறொழுகாவிடின் தவ உலக வளர்ச்சிக்கு ஒழுக்கம் வற்புறுத்தப்படுதல் வேண்டும் மக்கள் முன்னேற்றத்திற்கு அருளொழுக்கம் இன்றியமையாதது ஆகும். சைவசமய வளர்ச்சிக்கு அறிவுடையார் ஒன்றுசேர்ந்து ஆராய்ந்து தெளிந்து எல்லோருக்கும் நல்விஷயங்களைப் போதித்தல் வேண்டும். சமய சீர்திருத்தமே நமது முதற்பெரும் பணியாகும். பாமர நம்பிக்கையை (Arimstic Belief) ஒழிக்க அறிஞர்களவசியம் முற்படுதல் வேண்டும். பொது சமுதாய அறிவை நன்கு வளர்த்தல் வேண்டும். கேட்ட அளவிலேயே விரோதமென எவரும் ஆராய்ச்சியை வெறுத்தல் கூடாது. ஆராய்ச்சி இன்றியமையாதது. நூல்களை நனித்தறிதல் வேண்டும். பௌராணிகமதத்தை சிவஞான முனிவர் ஒதுக்கியே தள்ளுகின்றார். ஒருவிதமான நம்பிக்கையில் ஜனங்கள் ஈடுபட்டிருந்தபடியால் புரட்டுக்காரர்கள் அந்நம்பிக்கை வழியே புது ரிக்கார்டுகள் தயார் செய்து வஞ்சனை செய்வாராயினர். முன்னாளில் நாற்புரட்டு நிகழ்ந்தது உய்த்துணரத்தக்கதே. நூலாராய்ச்சியின் வழியேயே அறிஞர்கள் நல்லறிவை வளர்த்தல் வேண்டும். பாமரர் கேடுகளுக்கு அளவில்லை. அறிவுக் கொள்கைக்கும் புதுக்கருத்துக்கும் எதிர்ப்பு அதிகமுண்டு. நிலம் தட்டையல்ல, உருண்டை வடிவமே என்றுகூறிய கலிலியோ பெரிதும் துன்பப்படுத்தப்பட்டான். எனவே துன்பம் நேருவது இயல்பே. ஆராய்ச்சி, கொள்கைகள் அவசியமே. அவரவர் அறிவுக்குத்தக்கபடி சமய உணர்ச்சியுண்டாகின்றது. ஆதலால் சமய விசாரணை எப்பொழுதும் இருக்கவேண்டுவதாகும். வீண்சண்டைகள் கூடாது. சமயப் பொறுமை வேண்டும். அதனினும் சைவராவார் பொறுமை பெறுதல் கடமை. 'விரிவிலா அறிவினர்கள் வேறொரு சமயம் செய்தே எரிவினர் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்' என்று அப்பர் கூறுகின்றார். நடைமுறையில் சைவசமய முறைகள் கொள்கைகள் யாண்டும் காணப்படவில்லை. விபூதி ருத்திராக்ஷமே போதுமான கொள்கையென்று சிலர் கருதுகின்றனர். சமய ஞானமே சிறப்பாக விளங்குதல் வேண்டும். அறிவை உல்லாசமாக உலாவவிடுதல் வேண்டும். அதனைத்தளையிட்டுக் கட்டுப்படுத்துதல் ஒரு நாளும் முடியாது? பெற்றோரது நினைவின் பொருட்டு திதியைக் கொண்டாடவேண்டுவதே. அன்னார் பொருட்டுப் படைத்தலே பண்டைத்தமிழர் வழக்கம். அன்று அடியார்கட்கும் ஏழைகட்கும் அன்னமிடுதல் சிறந்ததே. பிதுரரின் பிரதிநிதியாகப் புரோகிதரைவைத்துத் திதிசெய்தல் ஆரியர்வழக்கமே. திதியை விரிவாகச்செய்து பணத்தை விரயம் செய்வது வேண்டாததொன்றே. பிதுரர் நன்மையடையும் பொருட்டு பிரார்த்தனை செய்வதே சிறந்தமுறை. மணிவாசகனார் இதனை, 'மூவேழ்சுற்ற முரணுறு நரகிடையாழாமே அருள்புரியும் அரசே போற்றி' என விளக்குகின்றார். ஜீவகாருணிய விஷயமாக திருவாங்கூர் மகாராணியார் பலி மறுத்தற் சட்டம் செய்திருப்பது போற்றற்பாலதே. நமது சட்டசபைகளிலும் அவ்வாறு செய்வது இன்றியமையாததாகும். பலியாடும் வழக்கத்தைத் தமிழ் நாட்டில் சில கீழ் மக்கள் நெடுநாளாகக் கைக்கொண்டு வருகிறார்களென்பது உண்மையே. ஆனால் ஒரு தமிழ் நாலிலாவது பலியிடுதல் அறமென உரைக்கப்படவில்லை. வேதம் பலியிடுதலை அறமென உறைக்கின்றது. ஊன்பயில்வேள்வி நல்லதென அறிஞர் உறுதிப்படுத்துதல் அறிவிலார்க்குக் கைகொடுத்தல் போலாகும். கொலை செய்தலை ஆதரிக்கும் வேதத்தைக் கடவுள் சொன்ன நூலென்று கூறுவது வியப்பே. ஆகமங்களில் சில இடங்களில் பலி சொல்லப்படுகிறது. இப்பொழுதுள்ள ஆகமங்கள் ஆரியரைத்தழுவி எழுதப்பட்டனவே. தமிழாகமங்கள் இருந்தன என்பதற்குச் சான்றுண்டு. அன்பே சிவமாதலாலும் கருணையே சைவ சமயமாதலாலும் சைவத்தில் கொலைப்பலிக்கு இடமில்லை. சைவ சமயம் உண்மையன்பையும் உண்மையறிவையுமே வலியுறுத்துகின்றது. சைவ நன்மக்களாகிய நாம் உயர்ந்த அன்பையும் சிறந்த அறிவையும் யாண்டும் பரப்புவோமாக. தலைவர் முடிவுரைக்குப் பின்னர் மறைத்திருவன், சிவஞான யோகிகள் வந்தனங்கூறினார்கள். திரு. சுந்தர ஓதுவாமூர்த்திகளின் குழாத்தினர் யோதி எல்லோரையும் இன்புற



## இரங்கூனில் லஞ்சா.

(திரு. ராம. பத்மனபராஜூ எழுதுகிறார்.)

ரிக்ஷாவை பர்மாவில் லஞ்சா என்று சொல்வது வழக்கம். இதனை "ஏழைகள் போர்டு" (Ford) என்றும் "வெங்கண்ணகார்" என்றும் ஹாஸ்யமாய்ச் சொல்வதுண்டு. பர்மாவில் லஞ்சா மிகவும் அதிகமாய் உபயோகப்படுத்தப்படுகிறது. இரங்கூன் பட்டணத்தில் மாத்திரம் ௧௯௨௬ வது வருடக் கணக்குப்படி ௩௫00 லஞ்சாக்களிருக்கின்றன. ௧௯௩௧-வது வருடத்தில் இரங்கூனில் லஞ்சாவே இல்லாமல் செய்துவிட வேண்டுமென சர்க்காரில் உத்தேசித்துக் கொண்டிருக்கிறார்கள். ஜன நெருக்கடி மிகுந்த இரங்கூனில் அதிக லஞ்சாக்கள் நடமாடுவதினால் அடிக்கடி உயிர்ச்சேதங்கள் ஏற்படுகின்றன. அவ்வித விபத்துக்கள் நிகழுவதை மட்டுப்படுத்துவதற்கு லஞ்சாக்களை எடுத்துவிடுவது நலமென்பது சர்க்காரின் யோசனை. வெகு நாட்களாகவே ஜீவகாருண்யம் மிகுந்தவர்கள் லஞ்சாத் தொழிலை நிறுத்திவிட வேண்டுமென எழுதியும் பேசியும் வந்திருக்கிறார்கள். ஆண்டிரூஸ் துரைமகனார் இரங்கூன் வந்திருந்தபொழுது "லஞ்சாக்காரர்கள்" படும் இன்னல்களைக் கண்டு மனம் பொறுது கண்ணீர் விட்டார். பன்னிரண்டு மணி வெயிலில் தார் ஊற்றிய தரையில், செருப்புக்காலுடன் நடப்பதே சிரமமாயிருக்கும்பொழுது, ஒரு மனிதனை—சில சமயங்களில் பருமனான இரண்டு மனிதர்களை—இழுத்துக் கொண்டு வெறுங்காலுடன் நமது உடன் பிறந்த சகோதரன் ஓடுவதை அன்புள்ள ஒருவன் கண்டு சகிக்கமுடியாது. லஞ்சா இழுப்பவர்கள் அற்ப ஆயுளாய் அத்தொழில் ஆரம்பித்த நாலைந்து வருடங்களில், இறந்துபோவது எல்லோரும் அறிந்த விஷயம். இவர்களிடையே அதிகமாய் உண்டாகிற காசநோய்கள், அவர்கள் கும்பத்தாரிடத்திலும், பிறகு ஜனசமூகத்தினிடத்தும் பரவி இதரர்களையும் பிணியாளர்களாகச் செய்விக்கிறது.

இரங்கூனில் லஞ்சா இழுப்போரனைவரும் நமது ஆந்திர தேசத்து சகோதரர்கள். இவ்வித இழி தொழில்களை நம் மக்கள் பிற நாடுகளிற் செய்ய என் மனம் ஒருப்படவில்லை. "ஏ! லஞ்சா!" எனும் தெலுங்கில் அவனை இழி சொற்களால் அலங்கரிப்பதும் அவன் ஏதாவது பதிலளித்தால் கால் செருப்பை யெடுத்து அடிக்கப் போவதும் இரங்கூன் தெருக்களில் தினம் காணும்காக்ஷியாகும். ஆனால், இத்தனை ஆயிரமக்கட்கு உணவளிக்கும் தொழிலை நிறுத்தி விடலாமா? ரிக்ஷாக்கள் போய்விட்டால் மோட்டார்கள் மிகுதியாகின்றன. அப்பொழுதும் தெருக்களில் செல்பவனுக்கு விபத்துக்கள் நேரிடக்கூடியதுதான் என்று சிலர் வாதிக்கின்றனர். இவர்கள் கூற்றில் உண்மையில்லாமலில்லை எனினும், மோட்டார்கள் மிகுந்து மேல் நாட்டிற்குப் பணம் சென்றாலும், நம்மவர் பலர்க்கு அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படினும் கருணையைமுன்னிட்டு, நம் நாட்டின் கௌரவத்தைக் காப்பாற்றுவதை யுன்னி, தொத்து வியாதிகள் பரவாமல் தடுப்பதற்காக, கட்டுவாய்ந்த தேகமுடைய நம் மக்களிற் சிலர் அகால மரணமுறுவதை நீக்குவதற்காகலஞ்சாத்தொழிலைநிறுத்துவது அவசியம். ஒவ்வொரு லஞ்சாவும் அறுநூறு அல்லது எழுநூறு ரூபாய் விலையாகிறது. லஞ்சாக்களிற் பெரும்பாலும் தனவைசியர் கடைக்குச்சொந்தமானது எனத் தெரிகிறது. லஞ்சாவின் சொந்தக்காரர்கட்கும் லஞ்சா இழுப்பவர்கட்கும் இத்தொழிலில் அதிகலாபமில்லை. லஞ்சா செய்து விற்கும் சில வியாபாரிகளே இத்தொழிலினால் அதிக ஊதியமடைகின்றனர். லஞ்சாத்தொழிலில் சம்பந்த முடையவர்களெல்லாம் சர்க்காரின் முடிவைக் கவனித்து ௧௯௩௦ வது வருட முடிவிற்குள் இத்தொழிலை நிறுத்திவிடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியது முக்கிய கடனாகும். இல்லாவிடில் இத்தொழிலில் அதிக நஷ்ட முறுவார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை.

தந்திவிலாசம்:— "ஹனுமான்"

## √ ஜோதிடம்.

மகாத்மாவின் விடுதலையைத் தெரிவித்த ஜோஸ்யர்.

தர்ம நியாயமான 5-கேள்விகள் எழுதியனுப்பினால் எதிர்கால பலனைத்தெரிவிப்போம். கடிதம் எழுதும் நேரத்தையும் குறித்தனுப்பவேண்டும். 5கேள்விகளுக்கு ரூ. 1. அதற்கு மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணா 4. ஒரு வருஷம் மாதவாரிபலன் எழுத ரூ. 2. (8-2-24-ல் சென்னை ஆந்திர பத்திரிகை பின்வருமாறு எழுதுகிறது:— திருத்தணி ஹனுமத் உபாஸி சடகோபாசாரியார் ஸ்வாமிகள் மகாத்மா காந்தி 5-2-24-ல் விடுதலை யடைவாரென்று 12-11-23-ல் எங்கள் பத்திரிகையில் பிரசுரம்செய்திருந்தார். அதன்படியே மகாத்மா விடுதலையடைந்தார். அவரது ஜோதிடத்திறமையை மனப்பூர்வமாக விக்யாபானம் செய்து கொள்ளுகிறோம்.) மற்றும் விவரத்திற்கு எழுதவும்.

ஆஞ்சநேய ஸ்வாமி ஜோதிடாலயம்,
திருத்தணிகை, சித்தூர் ஜில்லா.

## இதுவே தருணம்.

மேகம், கிரந்தி, நீரழிவு, கண்டமாலை, குஷ்டம், குன்மம், க்ஷயம், பக்ஷவாதம், தாதுநஷ்டம், சூதக சம்பந்த ரோகங்கள், வைத்ய முதலிய நீடித்த கொடிய ரோகங்களையும் விசேஷ பத்தியமன்னியில் நிவர்த்திக்கப்படும். அடியிற்கண்ட விலாசத்தில் எச்சமயமும் கலந்துகொள்ளலாம். தபால் மூலமாயும் சிகிச்சை பெறலாம்.

எம். ஆர். ராமச்சந்திரய்யர்
நேடிவ் டாக்டர்
3-1, வைடோஜிலேன்
திருவல்லிக்கேணி, சென்னை.

## சிறந்த படங்கள்.

குமரன் ஆண்டுமடலில் வெளிவந்துள்ள அருமையான படங்கள்.

| | | |
|---|---|---|
| குமரன் மூன்று வர்ணப்படம் | ... | 0 2 0 |
| ஷை ஷை 50-க்கு | ... | 5 0 0 |
| குன்றக்குடி மலையுங் கோயிலும் | ... | 0 1 0 |
| கபந்தன் | ... | 0 1 0 |
| குற்றால அருவி | ... | 0 1 0 |

50 படம் ஒரே தடவையில் வாங்கினால் 100-க்கு 10 கமிஷன் கொடுக்கப்படும். தபாற் செலவு வேறு.

தனவைசியன் கம்பெனி லிமிடெட், காரைக்குடி.



அன்பர்களே!

அரிய கட்டுரைகளைக் காண விரும்பினால், குமரனை வரவழையுங்கள்.

## நோட்டீஸ்.

பிரபவ௵ வைகாசிமீ உ௳ காரைக்குடியிலிருக்கும் சாத்தப்ப செட்டியார் மகன் வெங்கிடாசலஞ் செட்டியாராகிய நான் இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால்:—

என் தமயனர் லேட் ராமஞ்செட்டியாருக்கு ¼ பாத்தியமாயுள்ள காரைக்குடியில் மு. வி. வீதியில் கா. கா. அ. சொ. சொக்கலிங்கஞ் செட்டியார் வாங்கி இருக்கும் வீட்டிற்கு மேற்குபார்த்த முகப்பு உள்ளதும் யூனியன் செ. 5/40 உள்ளதுமான வீட்டில் ஷை லேட், ராமஞ்செட்டியார் உள்ளவரை அவர் அனுபவித்தும் அவர் இறந்தபின் அவர் மகன் சாத்தப்ப செட்டியார் அனுபவித்து வந்தும் பிறபாடு ஷை சாத்தப்ப செட்டியார் 15—4—26 வாக்கில் யாதொரு சந்ததி அன்னியில் இறந்துபோய்விட்டார். ஷை லேட். சாத்தப்ப செட்டியாருடைய யாவற்று ஸ்தாவர ஜங்கம சொத்துக்களுக்கும் நானே வார்சாக இருக்கிறேன். ஷை சொத்துக்கள் பூரவும் என்னையே சேர்ந்தது. ஷை வீடானது என் அண்ணன் மைத்துனன் முத்து கு. பழ. பழனியப்ப செட்டியார் பேருக்கு அநேக காரணங்களை உத்தேசித்து பினாமியாக கிரய தஸ்தாவேஜு எழுதிகொடுக்கப்பட்டிருந்தாலும் சென்ற 27-௵ கால மாக ஷை பாக வீட்டில் என் அண்ணன் மகனும் அவர்க்கு பிறகு என் அண்ணன் மகனும் அனுபவம் செய்து வந்திருக்கிறார்கள். ஷை சொத்துக்களை ஷை முத்து கு. பழ. பழனியப்ப செட்டியார் மகன் முருகப்ப செட்டியாருக் காவது என் அண்ணன் மகள் மீனாவி அச்சிக்காவது எவ்வித பாத்தியமும் கிடைக்காது ஷையார்களுக்கு என் அண்ணன் மகன் சாத்தப்ப செட்டியார் நிற ஷை பாக வீட்டை கிரயம்செய்யவாவது வேறு எவ்வித பர்தகப்படுத்தவாவது யாதொரு பாத்தியமும் பாத்தியமும் கிடையாது. ஷையார்களிடம் எவரும் எவ்வித பாத்தியமும் பெறக்கூடாது. ஷையார்களில் எவரிடமும் யாரும் எவ்வித கிரயமாவது பேறும் படுத்துக்கு ... யாவது ... அசைக்கிரமான பாத்தியதையாக ... கூட்டுப்படுத்தமாட்டா தென்றும் ஆவைகளில் எனக்கு ஏற்படும் சகல கஷ்டநஷ்டங்களுக்கும் ஷையார்களே ஜவாப்தாரியாக இருக்கவேண்டியதென்றும் இதன்மூலம் பகிரங்கப்படுத்தலானேன்.

கோட்டையூர் வீடு காரைக்குடி 9–6–27 } வெ. சா. வெ. வெங்கிடாசலஞ் செட்டியார்.

---

**செடிகள்.**

விடுகளையும் பங்களாக்களையும் அழகு செய்யக் கூடிய குரோட்டன் செடிகள் எம்மிடம் கிடைக்கும். விலை மிக சகாயம்.

வி. வெங்கட்டராமனாவ், கா. அ. ராம. கா. பங்களா. மேலூர், மதுரை ஜில்லா.

---

**ஆசையுண்டா?**

கைத்தொழில் முறைகளை கற்று கொண்டு ஏராளமாகப் பணம் சம்பாதித்து சுகமாய் ஜீவிக்க ஆசையுண்டா? அப்படியானல் நமது 'தொழிலாசிரியன்' என்னும் மாத சஞ்சிகைக்கு இன்றே சந்தாதாராகச் சேருங்கள்! வருட சந்தா ரூ. 2 தான் மாதிரிக் காப்பி இனாம்!

தொழிலாசிரியன் ஆபீஸ், (டபா டி 76) சிவகெங்கை.

---

படிக்கப் படிக்க இனிக்கும்! நினைக்க நினைக்க மணக்கும்!!

## சரீர மர்மசாஸ்திரம்.

(ஓர் மாஜி. மர்மநாக்.)

இதில் ஸ்திரீ புருஷ லக்ஷணங்களும் அவர்களது மர்ம ஸ்தானங்களின் அமைப்பும், அவர்களின் சேர்மையான உபயோகங்களும், இதின் மன்மத பிரும்கார ரஹஸியங்களும், புதிய தம்பதிகளுக்கும், பழைய தம்பதிகளுக்கும், கல்யாணமாகாத சிறுவர் சிறுமிகளுக்கும் இன்றியமையாத நூல்.

50-படங்களுடன் புஸ்தகம் 1-க்கு விலை ரூ. 1. (சிவபு பிரத்தியேகம்.)

மாணிக்கம் விலாசம் பிரஸ், அருணாசல முதலி வீதி, மதராஸ்.

---

இனம்! இனம்!!

## காம சாஸ்திரம்.

ஆரோக்கியம், செல்வம் சுகம் இவைகளைக்கூட்டும் புஸ்தகம் கேட்போருக்கு இனமாகவும், தபாற்செலவில்லாமலும் அனுப்பப்படும். இன்றைக்கே தங்கள் விலாஸத்தை தெரியப்படுத்துங்கள். இதுவரைக்கும் 14,37,000 புஸ்தகங்களை 20 பாஷைகளில் அச்சிட்டு இனமாக கொடுத்து வருகிறோம்.

ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டிய புஸ்தக இரத்தினங்களில் இது ஒன்று.

ஆதங்க நிக்ரஹ ஒளஷதாலயம், 26, பிராட்வே, மதராஸ்.

---

## சுவர்ணாம்ருதம்.

பிரசித்திபெற்ற ஆங்கிலேயர்களாலும் அமெரிக்கன் பாதிரிமார்களாலும் அபார சக்தியுடையதென்று போற்றப்படுகிற ஒளஷதம். ஸல்லாக் கரங்கள், தலைவலி, கை கால்களில் வீக்கம், பிடிப்பு, தொண்டைக் கம்மல், அஜீர்ணம், வயிற்று வலி, வயிற்றுப் போக்கு, விஷக்கடி ஜன்னி முதலிய வியாதிகட்கு கைகண்ட சஞ்சீவி. உபயோகிக்கும் விபரமடங்கிய ஆங்கிலேயர் அமெரிக்கன் பாதிரிமார் இந்தியர் களுடைய யோக்கியதா பத்திரங்களடங்கிய இயாட்லஸ் ஒளஷதத்துடனும் வரும். ஒரு முறை பரீக்ஷியுங்கள்.

விலை புட்டி 1-க்கு ரூ. 1–12–0. தபால் சார்ஜ் வேறு.

வெளிநாடுகளுக்கு கமிஷன் ஏஜண்டுகள் தேவை. மானேஜர், சுவர்ணாம்ருதம் கம்பெனி, கொடைக்கானல். (தென் இந்தியா.)

---

ஓர் முக்கிய கவனிப்பு.

முதல்தரமான அன்னாசு, செவ்வாழைப்பழம் முதலிய நிறுவுகள் மிகவும் லாபமான விலைக்கு வியாபாரிகளுக்கு அனுப்பி கொடுக்கப்படும், முன்பணத்துடன் ஆர்டர் செய்யவேண்டியது.

M. B. S. Agents, ஆவனிசுவரம் போஸ்டு, புனலூர் ஸ்டேஷன்.

---

வியாபார யுக்தி : : : :

: : : விளம்பரமே.

---

யுனைடெட் இந்தியா லைப்

## அஷ்யூரன்ஸ் கம்பெனி,

(லிமிடெட்.)

தலைமை ஆபீஸ்—மதராஸ். ஸ்தாபனம் 1906-ம் ௵

சென்னை மாகாணத்திலுள்ள லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி இதுவே.

அக்கிராசனர்:—

ஸர். எம். வி. டி. முத்தையா செட்டியார் K. T., M. L. A. சம்பதலில் 5 வருஷத்திற்கொருமுறை விநியோகிக்கப்படும். போனஸ் அஷ்யூரன்ஸ் தொகை ரூ. 1000-க்கு ரூ. 75. ப்ரிமியம் மிதமானது. நிபந்தனைகள்—சுலபமானவை. இரோல் டயம் கொடுப்பதை ஒத்திவைப்பது—இதில் ஓர் விசேஷம். பாத்தியதைகளை உடனே கவனிப்பது—ஓர் முக்கிய அம்சமாகும்.

"இந்தியாவிலே மிகவும் உறுதியானதும், பணத்தை யுடையதும், மேலான நிர்வாகத் திறமையுடையதும் மிகச் சிக்கனத்துடன் கூடியதுமான கம்பெனிகளில் இதுவுமொன்று. லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் முதன்மையானவற்றில் இது ஒன்றாகும்" என்று "பார்வார்டு" வருஷ அனுபந்தப் பிரசுரத்தில் காணப்படுகிறது.

விவரங்களுக்கு அடியிற் கண்டவருக்கு எழுதவும்.

எம். ராமமூர்த்தி, சீப் ஏஜெண்டு, ராமநாதபுரம் அண் புதுக்கோட்டை, காரைக்குடி. } மானேஜர்:— ஸ்டார் அண் கம்பெனி.

---

## இரகசியம்.

| | | | |
|---|---|---|---|
| வெளியாய்விட்டது! வெளியாய்விட்டது!! | | | |
| ஸ்திரி புருஷ இரகசியம் | 1 | 0 | 0 |
| இரதி மதன நெருக்க இரகசியம் | 0 | 12 | 0 |
| மணவாழ்க்கையின் மர்மம் | 2 | 4 | 0 |
| சதிபதிகளின் மர்மம் | 1 | 0 | 0 |
| சரீர மர்ம சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| கொக்கோகம் | 1 | 0 | 0 |
| மதன ரதி ரகசியம் | 1 | 0 | 0 |
| ஜீவ வசிய பரம ரகசியம் | 3 | 0 | 0 |
| மஹேஸ்வரிய சாஸ்திரம் | 1 | 8 | 0 |
| கைத்தொழில் வசிகரகசியம் | 1 | 8 | 0 |
| மதிமோச கனஜியம் 2 பாகம் | 2 | 0 | 0 |

கேட்லாக் இனம்.

எஸ். வி. ஆர். பகவான் & கம்பெனி, மிண்டு பில்டிங், மதராஸ்.

---

ஆச்சரியமான மருந்து. ஆப்ரேஷன் தேவையில்லை.

... கட்டி, விரைவாதம், யானைக்கால் ... முதலிய வியாதிகளுக்கு கைகண்ட ஒளஷதம். ... வியாதிகளானாலும், மேலே பூசி விட்டால் சௌகரியப்படும். எல்லோராலும் புகழப்பட்டிருக்கிறது. கடிதங்கள் ஆங்கிலத்தில் வரையவேண்டும்.

அவுன்ஸ் பாட்டில் விலை ரூபா 2-4-0
பவுண்ட் ரூ. 25-0-0
அரை பவுண்ட் ரூ. 12-8-0

S. P. Pharmaceutical Works, K. Deoghur, Bihar. (India.)

---

24-மணி நேரத்தில் குணம்.

எங்களின் டாக்டர் வி. ஜே. ... வாம் லோஷன் உபயோகிப்பினுல், படை, சொரிப்படை, எச்சகளிம்பு மற்ற எவ்வித சர்ம வியாதிகள் யாவும் 24-மணிக்குள் நீங்கும். பெட்டி 1-க்கு அணா 10.

எஸ். வி. ஆர். பகவான் & கம்பெனி, மிண்டு பில்டிங், மதராஸ்.

---

## பாரதியாரின் தேசிய நூல்கள்,

(ஏழு பாகங்கள் வெளி வந்துள்ளன)

இனிய தமிழ் நடையில் உயரிய பொருள் பொதிந்து விளங்குகின்றது. தமிழைப் பரவச்செய்வதற்கு பாரதியார் கூறும் பல உபாயங்களையும் முறைகளையும் ஒவ்வொரு தமிழரும் கைக்கொள்ள வேண்டியது அவசியம். ஆகையால் உடனே எழுதுங்கள்!

| | | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|
| க. | சுதேசகீதங்கள் க-ம் பாகம் | ௧ | ௦ | ௦ |
| உ. | ஷை உ-ம் பாகம் | ௧ | ௦ | ௦ |
| ௩. | குயில் கண்ணன் முதலிய காதற் பாட்டுகள் ... | ௦ | ௧௦ | ௦ |
| ௪. | ஞான ரதம் (வசனம்) ... | ௦ | ௮ | ௦ |
| ௫. | பாஞ்சாலி சபதம் (காவியம்) | ௦ | ௧௨ | ௦ |
| ௬. | பகவத் கீதை விரிக்க முகவுரையும் பொழிப்புரையும் கொண்டது ... | ௦ | ௦ | ௦ |
| எ. | சந்திரிகை நர் ஆசார சிர திருக்கக் கதை ... | ௦ | ௧௨ | ௦ |
| ௮. | சுதேச சித் சுகிமக்கம் ... | ௦ | ௦ | ௦ |

கிடைக்குமிடம்:— வி. சு. கிருஷ்ணமூர்த்தி, "குமரன்" காரியாலயம் காரைக்குடி.

---

ஜவுளி வியாபாரிகள் கவனிக்கவும்.

எங்களிடம் பலரகம் புது நிறுவுகளிட்டு துணிகளும், துண்டுகளும், வேலைப்பாடுகள் முதலியவைகளும் மிகவும் ஸல்ப விலைக்குக் கிடைக்கும். ஒருதரம் வாங்கிப்பார்த்தால் எப்பொழுதும் வாங்குவீர்கள். கேட்லாகுக்கு எழுதவும்.

The M. B. SYNDICATE, Manufacturers agent & Exporters, No 2, Auvaneeswaram P.O., S.I.R.

---

முந்துங்கள்! முந்துங்கள்!!

## குமரன் ஆண்டுமடல்

சொற்பப் பிரதிகளே கைவசமிருக்கின்றன. வேண்டுவோர் விரைவில் எழுதுக.

விலை ரூபாய் ஒன்றேகால்.

---



புதுக்கோட்டை

## இன்டஸ்ட்ரியல்வர்க்ஸ் Ld.,

புதுக்கோட்டை 1908-௵த்திய கம்பெனிகளின் 2-வது ரெகுலேஷன்படி ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது. மாட்ச் பாக்டரி அண்ட் டானரி, கீரனூர், குளத்தூர் புதுக்கோட்டை.

**மூலதனம் ரூபா 1,00,000.**

பங்கு 1-க்கு ரூபா 10 வீதம் (10000) பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. பங்குக்கு மனுக் கொடுக்கு காலத்தில் பங்கு ஒன்றுக்கு 2 வீதமும் பங்கீடு செய்தவுடன் ரூ 2 வீதமும் பாக்கியை மாதம் 1 க்கு ரூ 2 வீதமுமாக மூன்று மாதங்களில் செலுத்த வேண்டும்.

பிரதிகுறம்: அடியிற்கண்டவர்கள் கம்பெனியின் ஏஜண்டுகளாக சற்றுப் பிரயாணஞ் செய்து பங்குகள் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். பங்கெடுத்துக் கொள்பவர்கள் அவர்களிடம் பணம்செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

இதர விசேஷ விவரங்களுக்கு ரிஜிஸ்டர்டு ஆபீசுக்கெழுதி விவரம் தெரிந்து கொள்க.

வருஷாந்த்த கிளாபம் 100க்கு 45 வீதம் கிடைக்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

**ஏஜெண்டுகள்.**

பர்மா அண்டு மலேயா ஸ்டேட்ஸ் PO.

1. ஸ்ரீமான் எஸ். அப்துல்கனி ராவுத்தர் மானேஜிங் ஏஜண்ட்ஸ் பார்ட்னர்
2. ஸ்ரீமான் கே. எஸ். மேனன் அவர்கள்
3. மானேஜர் இண்டோ-மலாயன் ஸ்டோர். 17, சைனு ஸ்ட்ரீட், பினங்கு.

தென்னிந்தியா அண்டு சிலோன்

4. ஸ்ரீமான் பு. ந. கா. மைய்து முகம்மது ராவுத்தர் அவர்கள்
5. ஸ்ரீமான் சே. முகம்மது சுல்தான் ராவுத்தர் அவர்கள்

இன்னும் இதர இடங்களுக்கு ஏஜெண்டுகள் தேவை.

மானேஜிங் ஏஜெண்ட்ஸ், மு. அ. சே. மு. அப்துல்கனி அண் கோ.

---

## மலேயாவிற்கு நற்செய்தி.

மலேயா நாட்டில் உண்மையான கதர் மலிவான விலைக்கு எங்கு கிடைக்குமென்றால்?

**ஈப்போ தனவைசியர் கம்பெனியில்தான்**

என்பது தெரிந்ததேயாகும். மலேயாவில் முதன் முதலாக நாட்டுக் கைத் தொழிலையாதரிக்க நிறுவிய வியாபாரசாலை இதுவொன்றே. காங்கிரஸ் அத்தாட்சி பெற்ற கதர்களும் தனவைசியர்களுக்கு இன்றியமையாத வேண்டிய மற்றப் பொருள்களும், ஏராளமாகவுண்டு.

மானேஜர் தனவைசியர் கம்பெனி, 77, பெல் பீல்டு வீதி, ஈப்போ.

---

நீங்கள் வெகு காலமாக எதிர் பார்த்தது எது?

## அமெரிக்கன் சில்க் அங்கவஸ்திரம்.

அப்பய வெள்ளை, நிக்கான பட்டு, தினசரி துவைத்து உபயோகிக்கலாம் வண்ணுறைக்குப் போடலாம். இருபக்கங்களிலும் குஞ்சம் கட்டியது.

5½ x 40" அகலம் விலை ரூ. 6—8—0 தான்.

கிடைக்கவில்லையே! என்று வருந்த வேண்டாம். ஏற்கெனவே ஒரு மாதத்தில் 1500 பட்டுகள் செலவாயின, திரும்ப வந்த ஆர்டர்களை கவனிக்க முடியவில்லை. புதிய ஸ்டாக் வந்திருப்பதால்,

முந்திக்கொள்ளுங்கள்! முந்திக்கொள்ளுங்கள்!!

பாக்கிங், தபால் சார்ஜ் இனம்.

கே. எஸ். முத்தையா கம்பெனி, சென்னை.

---

## நமது பலசரக்குக்கடை.

அஞ்சா நெஞ்சனுல் எழுதப்பெற்று, தமிழறிஞர் யாவராலும் புகழப்படும் நூல் இது ஒன்றே. ஜாதி சமய முன்னேற்றத்திற்கு சாதனமான உண்மைகள் பல மிளிர்கின்றதால் தமிழ் இலக்கியத்தில் இந்நூல் முக்கிய ஸ்தானம் பெறுமென்பது. யாவரும் அறிந்த விஷயமே. சொற்பப் பிரதிகளே கைவசமுள்ளன. வேண்டுவோர் விரைவில் எழுதுக!

விலை அணு பத்தே.

**கூழை ரங்கன்.**

இதுவும் அஞ்சா நெஞ்சனுல் எழுதப்பெற்ற ஓர் இனிய அற்புத கவினகம், தமிழ்ச்சுவை அறிவார்க்குத் தேனினை இனிக்கும் என்பதில் ஐயமில்லை. இதன் விலை ரூபாய் ஒன்றுதான்.

தபாற்கூலி வேறு.

மானேஜர், "குமரன் புத்தகசாலை" காரைக்குடி.

---

கதர்ப் பத்திரிகைக்கு

வருட சந்தா ஒரு ரூபாய் மாத்திரம் அல்லது 8000 கஜம் நூல்.

அகில பாரத சர்க்கா சங்கத்தின் தமிழ் நாட்டு இலாகாவாகிய எங்களால் மாதம் இருமுறை கதரைப்பற்றி மாத்திரம் பிரசுரிக்கப்படும் அ பக்கங்களடங்கிய

❀ குடி நூல் ❀

என்ற கதர்ப் பத்திரிகையின் வருட சந்தா ஏழை ஜனங்களின் உபயோகத்தை முன்னிட்டு ஒரு ரூபாய் அல்லது 8000 கஜம் நூல் என்று நிர்மானிக்கப்பட்டிருக்கிறது. சந்தாவை முன்னதாகவே மணியார்டர் அல்லது ஸ்டாம்பு மூலமாக அனுப்பவேண்டும். பத்திரிகையை வி. பி. யில் அனுப்புவதில்லை.

அகில இந்தியாவிலும் விசேஷமாகத் தமிழ் நாட்டிலும் கதரியக்கத்தின் முன்னேற்றத்தைப் பற்றிய எல்லா விவரங்களும், கதரைப் பற்றிக் கதர் பக்தர்களால் எழுதப்பட்ட வியாசம், கதை, கவிதை முதலியவைகளும் குடிநூலில் பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. கதரியக்கத்தில் பக்தியுள்ளவர்கள் சந்தாதாரர்களாகச் சேர்ந்து வேண்டிய உதவி புரியுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

மானேஜர், அகில பாரத சர்க்கா சங்கம், ஈரோடு.

---

எங்கள்

## புது கெடியாரம்

"மாடர்ன் ரேகுலேட்டர்."

தற்காலத்துக்கேற்றதாயும், நவீனமாயும் உள்ள புதிய வால்கிளாக். நல்ல மெக்கானிஸத்துடன் கூடிய கிளாக், சரியான காலம் காட்டும்.

விலை ரூபாய் 3/—தான்.

5-வருஷம் உத்திரவாதம். முழு விபர கேட்லாக் இனம்.

V. S. வாச் கம்பெனி, தபாற் பெட்டி செ. 105, சென்னை.

---

கலியாண காலங்களிலும் பிரயாண காலங்களிலும்

நீங்கள்

உயர்ந்த பலவித தோல்களினல் செய்யப்பட்ட டிரங்கில் கேஸ், சூட் கேஸ், பெட் பாக், ஹாண்ட் பாக், பிரீப் பாக், டாய்லெட் கேஸ்கள் இன்னும் பற்பல நல்ல உபயோகமுள்ள சாமான்களை வாங்கமறக்காதேயுங்கள். எமது பெரிய கேட்லாக்குக்கு உடனே எழுதுங்கள். தபாற் செலவின்றி இனமாய் அனுப்பப்படும்.

விலாசம்:— டைமண்ட் லெதர் கூட்ஸ் கம்பெனி, செ. 9 பிராட்வே, மதராஸ்.

---

## பி. எம். ஆபிரஹாம்,

பல் வைத்தியம் செய்பவர்.

ராமேஸ்வரம் தேவஸ்தானம் டிரஸ்டி ஆபீசுக்கு எதிர்வீடு. நாயக்கர் புதுத்தெரு, மதுரை. (S. I.)

ஞாயிற்றுக்கிழமை தவிர மற்ற நாட்களில், காலை 8 மணிமுதல் 11 மணி வரையும், மாலை 3 மணிமுதல் 5 மணி வரையும் இலவசமாய் நோயை கவனிப்பேன். தங்கப்பற்கள் கட்டுவதில் விசேஷ சாமர்த்தியமுண்டு. பூர்ண திருப்தியைக் கொடுப்பது அப்படியில்லாவிடில் பணம் வாபஸ் செய்யப்படும். 1920-ம் வருஷத்தில் ஸ்தாபிக்கப்பட்டது.

குறிப்பு:—தங்களுடைய வருகையைத் தீர்மானித்துக் கொள்ளுங்கள். அல்லது, ஜனமிகுதியால் காலதாமதம் ஏற்படலாம்.

சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றி பிரசுரிக்கப்பெற்றது.

